கழக வெளியீடு ௪௭௧

# குடமலைத் தெய்வம்

[ஒரு நாடகம்]



ஆசிரியர் :

புலவர் "அரசு"



திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி :: சென்னை-1.

# முன்னுரை

சிலப்பதிகாரத்தில், வஞ்சிக் காண்டத்தில், வீரனான சேரன் செங்குட்டுவனுடைய வாழ்க்கை யொளியின் ஒரு கதிரைக் காணலாம். அதனைக் கலந்து 'குடமலைத் தெய்வம்' தமிழ் நாட்டிலே வெளிவருகின்றது.

தமிழ் மகன் தன் பழமையை ஒருமுறை— பசித்தவன் பழங்கணக்கைப் பார்ப்பது போல வேனும் — பார்க்கட்டும் என்னும் எண்ணத்துடன் எழுகிறது இந்த நூல்.

தமிழன் செந்நீரிலுள்ள கோழையணுக்கள் மடிந்து வீர அணுக்கள் செறிந்து ஆக்கம் பெற வேண்டும். இப்பணியிலே பலர் ஈடுபட்டுள்ளனர். என் பணியும் சிறிது இருக்கட்டுமே.

என் முயற்சிக்குச் சிறந்த ஆக்கமளித்து இந் நூலை வெளியிடும் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தினார்க்கு வழக்கம்போல் என் நன்றியைச் செலுத்துகிறேன்.

பூவிருந்தவல்லி,
20—10—48

அ. ரா. சா.

## கதைச் சுருக்கம்

திருச்செங்கோட்டிலே, வேங்கைமர நிழலிலே, (ஏறக்குறைய இரண்டாயிரம் ஆண்டுகட்குமுன்) ஒளி குன்றிய மணிபோல ஒரு பெண் (கண்ணகி) தன் கணவனை எதிர் நோக்கித் தவம் புரிகிறாள். வானிலிருந்திறங்கிய பேரொளியொன்றிலே வானவூர்தியுடன் வந்து, அவள் கணவன் அவளை அழைத்துச் செல்கிறான். வியக்கத்தக்க இந்நிகழ்ச்சியைக் கண்ட மலைவாணர்கள் அவளைத் தெய்வமாக வழிபடுகின்றனர்.

அதே காலத்தில், மலைவளங்காண வந்த சேரமன்னன் செங்குட்டுவன், தன் அரசியுடனும் இளங்கோவடிகளாம் தம்பியுடனும் பெரும்புலவர் சாத்தனாருடனும் மற்றும் பரிவாரத்துடனும் பேரியாற்றங்கரையிலே அமர்ந்திருக்கிறான். அவனிடம் அந்த வேடர்கள் அப்பத்தினித் தெய்வத்தின் வரலாற்றை விளம்புகின்றனர். சாத்தனாரும் மதுரை நிகழ்ச்சியைச் சாற்றுகிறார். சேர நாட்டரசி வேண்மாளின் விருப்பத்தால் அக்கற்புத் தெய்வத்தை வழிபட அரசன் நினைக்கிறான். அதற்குச் சிலை கொணர இமயத்திற்குச் செல்லவும் முடிவு செய்கிறான்.

செங்குட்டுவன், முன்னொரு முறை தன் அன்னைக்குப் பத்தினிக்கல் கொணர இமயத்திற்குச் சென்றான். அப்போது, கனகவிசயர் இருந்திருந்தால் இந்தத் தமிழ் மன்னன் வெற்றிபெற முடியாதென்று கனகவிசயர்கள் வட நாட்டிலே நடந்த ஒரு விருந்திலே கூறினார்களாம். அச்செருக்குரையைக் கேட்ட செங்குட்டுவன் வட நாடு செல்வதை உறுதிப்படுத்துகிறான். தன் வீரர்களுக்கு

விருந்தளித்து, ஊக்கமூட்டி முக்கட் செல்வரை வணங்கி வடநாடு நோக்கிச் செல்கிறான்.

நூற்றுவர் கன்னர் என்னும் ஆரிய அரசர்கள் கங்கையைக் கடக்கப் படகுகள் கொடுக்கின்றனர் தம் நண்பனான செங்குட்டுவனுக்கு. அவன் வடநாட்டை அடைகிறான்.

வட நாட்டிலே, கனகன் அரண்மனையிலே, அவன் தங்கை ஆரியாங்கனை செங்குட்டுவன் வருகையையும் போரையும் கேட்டு நடுங்குகிறாள். செங்குட்டுவன் முன் வந்தபோது அவன் அழகிலும் ஆண்மையிலும் ஈடுபட்ட அவள் இப்போரைத் தடுக்க நினைக்கிறாள். தன் தமயனைப் போர்செய்ய வேண்டாமென்று, தான் கண்ட தீய கனவைக் கூறித் தடுக்கிறாள். தன் காதலைமட்டும் அவள் அவனிடம் கூறவில்லை. அவன் அவளை இகழ்ந்து போர்செய்யவே முயல்கிறான்.

கனகவிசயர் கூட்டிய பேரவையிலே ஆரிய அரசர் பலர் குழுமிப் போர் தொடுக்க முடிவுசெய்து படைதிரட்டுகின்றனர்.

போர் நடக்கிறது. கனகவிசயரை வில்லவன்கோதை (சேரன் படைத்தலைவன்) சிறைபிடிக்கிறான். அவர்கள் தலையிலே இமயக்கல் ஏறுகிறது.

மறுநாள், சேரன் பாசறையிலே ஆரியாங்கனையும் அவள் தோழியுடன்—தாங்கள் கனகவிசயரின் அரண்மனை நாட்டியப்பெண்களெனக் கூறி—நாட்டியம் ஆடுகின்றனர். அவர்களுக்குப் பரிசளித்த செங்குட்டுவன், அவர்கள் விருப்பப்படியே தமிழ் நாட்டுக்குத் தன்னுடன் வர ஒப்புக்கொள்கிறான். போரில் வென்ற வீரர்க்குப் பரிசளிக்கிறான்.

கஙகைக கரையிலே சேரன தஙகுகிறான கணணகி யெனும அக கறபரசிககுக கொணாநத இமயககல அஙகே நீரபபடை செயயபபடுகிறது மாடலன எனும அநதணன —கோவலன நணபன—'மாதவி பாடிய கானறபாணி கனக விசயர முடிததலையை நெரிதத' கதையை விளககுகிறான சேரநாடடை நோககித திருமபுகிறது சேரன படை ஆனால், சோழனையும பாணடியனையும கணடுவரக கனக விசயர தம தலையிலேறறிய கலலுடன நீலன முதலிய வீரர்களால கொணடுபோகபபடுகினறனர

சேர அரசி வேணமாள தன கணவன செஙகுட்டுவன வருகையை நோககிக கவலையுடன இருககிறாள தூதுவன முனனரே வநது அவள கவலையைப போககுகிறான நகரணி செயயபபெறறுச சேரன வெறறிமஙகையுடன நகரவலம வநது அரணமனையை அடைகிறான, வேணமாளை மகிழவிககிறான

கனகவிசயரைச சோழ பாணடியரிடம காட்டச சென்ற நீலன திருமபி வருகிறான் 'தோலவியையும இழி வையுந தமநத கனகவிசயர தலையிலே கலலைச சுமததுப வீரம புரிநது!' என அவர்கள இகழநததாக அவன செங குட்டுவனிடம கூறுகிறான அதனால கொணட சினததை மாடலனும இளஙகோவும தணிககினறனர கனகவிசயர சிறையிலடைபபடுகினறனர

அனறிரவு, நிலவிலே அரணமனைத தோட்டத்திலே சோழனும பாணடியனும இகழநததை நினைதது உலாவும அரசன ஒரு பெணணின் அவலநதோயநத குரலைக கேட கிறான செடி மறைவிலே அவளருகில நிறகிறான ஆரியாங கனை யெனனும அபபெண, செஙகுட்டுவன தன்னைக காத லிகக மாட்டானென எணணி வாயவிட்டுத தன நிலையைச

கூறி வருந்தித் தற்கொலைசெய்துகொள்ள முயற்சி செய்கிறாள். அரசன் அவளைத் தடுத்து, அவளுடைய உண்மைக் காதலை ஏற்கிறான்.

மறுநாள் வில்லவன் கோதையின் வீரப்பணிக்கு வயிர வாளைப் பரிசாகக் கொடுக்கிறான் சேரன். கண்ணகிக்குப் படிவமும் கோயிலும் பண்படுகின்றன.

சிறையிலடைபட்ட கனகவிசயர் தம் நிலை குறித்துப் புழுங்குகின்றனர். செங்குட்டுவன் அவர்களைத் தேற்றி அவர்கள் நாட்டை யளித்து விடுதலை செய்கிறான்.

கண்ணகிக்குச் சிலைநாட்டும் நாள் நெருங்குகிறது. இலங்கைக் கயவாகுவும் சோழனும் பாண்டியனும் கொங்கிளங் கோசரும் மாளுவ மன்னரும் நூற்றுவர்கன்னரும் பிற அரசர்களும் வந்து குழுமுகின்றனர். கண்ணகியின் அடித்தோழியும், பார்ப்பனத்தோழி தேவந்தியும், செவிலித் தாயரும், மாதரிமகள் ஐயையும் வந்து கண்ணகியை நினைத்துக் கதறுகின்றனர்.

நன்னாளிலே கண்ணகி ‘குடமலைத் தெய்வ’மாகக் காட்சியளிக்கிறாள். சேரநாட்டுப் பெண்களின் வாழ்த்தொலி வானிலே பரவுகிறது. செங்குட்டுவன் நெஞ்சம் களிப்பால் விம்முகின்றது.

தமிழ்நாடு வெல்க!

---



வானகத்திலிருந்து விமானம் வருகிறது

வேடர்கள் வியப்புடன் கண்ணகியை வணங்குகின்றனர்

# குடமலைத் தெய்வம்

## காட்சி 1

காலம் : காலை

இடம் : திருச்செங்கோடு - ஒரு வேங்கை மர நிழல்.

[வேங்கை மரத்தின் அருகே ஒரு சுனை, ஓர் அருவி. அருவி நீர் சுனையிற் படிந்து வெளிவந்து மேலும் போகிறது. சுனையிலும் அருவியிலும் பலர் நீர் விளையாடுகிறார்கள். மலைச்சாரல்களிலே தினைப்புனங்களிற் குருவிகளையும், கிளிகளையும் ஓட்டும் வேட மங்கையரின் இனிய பாட்டுக்களும் ஓசையும் கேட்கின்றன. வேடர் தலைவனான சொடியனும் கொடிச்சியுமாக நீராடிவிட்டு வேங்கைமர நிழலுக்கு வருகிறார்கள். அங்கே கண்ணகி நிற்கிறாள். அவள் முகத்திலே இரக்கத்தின் தோற்றம். அவிழ்ந்து தொங்கும் கூந்தல். இடுக்கண் படிந்து இடுங்கிய கண்கள். புழுதி படிந்த இளைத்த மேனி. கண்ணகியைக் கண்ட வேடனும் வேடிச்சியும் திகைக்கிறார்கள். பிறகு மெல்ல அருகிற் செல்கிறார்கள்.]

**கொடிச்சி :** (வியப்புடன்) அம்மா! இந்த இடத்திற்கு ஏலாத வருகை! காணற்கியலாத காட்சி! வானத்தில் இருந்து இறங்கிய மின்னல்! வேடர்கள் விளையாடும் இடத்திலே மெல்ல வந்து நிற்கிறீர்கள்! தாங்கள் யார்? எங்கள் வள்ளியோ?

**கண்ணகி :** (வெற்றிடத்தை நோக்கிய பார்வையுடன்) நான் ஒரு தீவினையாட்டி! அழகிய மதுரையின் அணியைச் சிதைத்தேன்! அரசனை மடித்தேன்! கணவரையிழந்து கலங்கும் கடலில் அலையும் துரும்பானேன்.

**கொடியான் :** (வியந்து) என்ன! மதுரையை ஒரு மங்கை அழிப்பதா? அரசனை மடிப்பதா? ஒரு தீப்பொறி கடலைச் சுடுமோ?

**கண்ணகி :** தீப்பொறி கடலைச் சுடாது. ஆனால், எவ்வளவு பஞ்சுப் பொதியாயினும் சுடும்.

**கொடிச்சி :** கொஞ்சம் தெளிவாகச் சொல்லுங்களம்மா!

**கண்ணகி :** (கண்கலங்க) என் சிலம்பை விற்கச்சென்ற என் கணவரைக் கள்வனென்று—ஆராயாமற்—கொன்றுவிட்டான் பாண்டியன். என் வாக்கால் உண்மையறிந்து தானே உளம் வெடித்து இறந்தான். அரசியும் மலரோடு செல்லும் மணம் போல—உயிர் துறந்தாள். என் வாக்கால்—சீறிக் கூறிய தீப்பொறியால்—மதுரை எரிந்தது. தீவினையாட்டியானேன். கணவரை அடைய இங்கு வந்து தவமியற்றுகிறேன்.

**கொடியான் :** (கண்கலங்க) அம்மா! நீங்கள் எங்கள் வழிபடு தெய்வம். மதுரை யெரிந்ததையும் மன்னன் மடிந்ததையும் கேள்வியுற்றோம். நேரிலே தங்களைக் காணும் பேறும் பெற்றோம். காட்டு மக்களாயினும் ஒழுக்கத்தை மதிப்போம். உங்களுக்கு எக்குறையுமில்லாமல் வேண்டியவற்றைச் செய்து தருகிறோம்.

**கண்ணகி :** (புன்முறுவலுடன்) எனக்கு ஒன்றும் வேண்டியதில்லை. இப்படியே தவமியற்றி விடுதலை பெறுவேன். ஆகையால், ஒருவகைக் கவலையும் வேண்டாம். கணவரே என் உயிர். உயிர் நீங்கிய உடலுக்கென்ன வேண்டும்?

**கொடிச்சி** (விழுந்து வணங்கியெழுந்து) பெண்களின் மாணிக்க விளக்கு நீங்கள். உங்களால் உலகமே உணர்வு பெறும். நீங்கள் செய்தவைகள் என் மெய்யைச் சிலிர்க்கச் செய்கின்றன. இறைவர் உங்களை நல்ல நெறியிலே—நீங்கள் நினைத்த நெறியிலே—சேர்ப்பார்.

**கண்ணகி ·** (மனக்குறைவுடன்) அம்மா! உங்கள் வாழ்த்து நன்றாகப் பலன் தரும் 'ஓருயிர் இறக்கும் போது என்ன நினைக்கிறதோ அதை அடையும்' என்று பெரியோர்கள் இயம்புவார்கள்.

**கொடியான் :** (வணங்கி) நீங்கள் எங்கள் தெய்வமென்று முன்னமே சொன்னேன் இப்பொழுது நான் சொல்வதை ஏற்றுக்கொள்ள வேண்டும். இங்கே ஒரு சிறு குடிசை கட்டித்தருகிறோம். துறவிகளாயினும் வெயிலும் மழையும் வருத்தாமல் விடுமா?

[ஓர் ஊதுகொம்பை எடுத்து ஊதுகிறான்.]

**கண்ணகி :** (வருத்தத்துடன்) இறப்பு ஒன்றையே எதிர் நோக்கி நிற்கிறேன். வெயிலும் மழையும் என்னை என் செய்யும்? எதற்கும் அஞ்சேன்.

[வேடர் பலர் ஓடிவருகிறார்கள் ]

**கொடியான் ·** (அரசனுக்குரிய முறையில்) நீங்களெல்லோரும் ஒரு நாழிகைக்குள் இங்கே ஒரு குடிசை கட்டவேண்டும்.

**வேடர்கள்** (வணங்கி) அப்படியே ஆகட்டும்.

**கண்ணகி** வேண்டாம்! வேண்டாம்!! வெயிலும் மழையும் நான்செய்த தீவினையைப் போக்கமாட்டாதவை. மதுராபதி என்ற ஒரு தெய்வம் கூறிய வாறு என் கணவரை அடைவேனென்ற நம்பிக்கை உண்டு. அதுவே ஒன்றே என் நோக்கம். குடிசை கட்டிக் குடியிருக்க ஒவ்வேன்.

**கொடியன்** (வணங்கி) அப்படியாயின் உங்கள் விருப்பம். (வேடர்களை நோக்கி) நீங்களெல்லோரும் இந்த அம்மையாரை விழுந்து கும்பிடுங்கள்.

[வேடர்கள் விழுந்து வணங்குகிறார்கள்.]

**கண்ணகி** (நடுக்கத்துடன்) வேண்டாம் வணக்கம் வேண்டும். உங்கள் அன்புக்கும் மதிப்புக்கும் ஏலாதவள் நான்.

**கொடியன்** (வணங்கி) நீங்கள் கூறினும் கூறாவிட்டாலும் எங்கள் உள்ளம் உங்களை வழிபடு தெய்வமாக ஏற்றுக்கொண்டு கும்பிடுகிறது.

[கண்ணகி விரைவாகக் கீழே அமர்கிறாள். அசைவின்றிக் கண்களை மூடிக்கொள்கிறாள். உடனே ஓரொளி தோன்றுகிறது. அவளைச் சுற்றி வானத்திலிருந்து மலர்மழை பெய்கிறது. வானத்திலிருந்து ஒரு விமானம் வருகிறது. அதனில் கோவலன் இருக்கிறான். கண்ணகியின் உயிர் பிரிகிறது. தெய்வ உடல் பெற்றுக் கணவனுடன் விமானத்திற் செல்கிறாள். எல்லோரும் வியப்புடன் நோக்குகின்றனர்.]

---

## காட்சி 2

**காலம்** மாலை

**இடம்** வேங்கை மரத்தடியிலேயே வேடர்கள் கண்ணகியை வழிபடுகிறார்கள்

[வேங்கை மரத்தடியில் ஒரு கல் நட்டுப் பூமாலை யிடப்பட்டுள்ளது. வேடர்கள் ஒருபுறமும் வேடிச்சிகள் ஒருபுறமும் கல்லுக்கெதிரில் நிற்கிறார்கள். தேனும், தினைமாவும், கிழங்கு வகைகளும் வைக்கப் பட்டுள்ளன. அகிற்புகையும், சந்தனப்புகையும் மணக்கிறது. தொண்டகம், சிறுபறை என்னும் பறைகள் முழக்கப்படுகின்றன. கொம்புகள் ஊதப் படுகின்றன. மணியோசை கேட்கிறது. இடை யிடையே நிறுத்திக் கண்ணகியைப் பாடுகிறார்கள்.]

பாட்டு

**வேடர்கள்** பாண்டி நகரை எரித்த — உயர்
பத்தினித் தெய்வத்தைப் பாடிடுவோமே (பாண்டி)

**கொடியன்.** யாண்டும் இலாப் புதுமை — தானே
யாக்கையை விட்டே தெய்வ யாக்கை பெற்றாளே

**கொடிச்சி** ஆண்டு கணவனுடனே — நாம
அஞ்சலி செய்திட வானிற் சென்றாளே

**எல்லோரும்** பாண்டி நகரை எரித்த — உயர்
பத்தினித் தெய்வத்தைப் பாடிடுவோமே

**கொடியன்:** கணவன் தனைக் கள்வன் என்றே — கொன்ற
காவலன் மாண்டிட உண்மை விளக்கி

**கொடிச்சி** மண்மிகு கோதையர் எல்லாம் — இன்று
வாழ்த்திட வீரமெய்க் கற்பை விளக்கி

**வேடர்கள்** பாண்டி நகரை எரித்த — உயர்
பத்தினித் தெய்வத்தைப் பாடிடுவோமே

**கொடியன்** பெண்கள் பெருமை விளக்கு—இந்தப்
பேருலகெங்கும் பணியும் விளக்கு

**கொடிச்சி** பண்கள் இசைக்கும் விளக்கு—மலைப்
பாவை விளக்கு மணிவிளக்காணாள்.

**வேடர்கள்** பாண்டி நகரை யெரித்த—உயர்
பத்தினித் தெய்வத்தைப் பாடிடுவோமே

**கொடியன்:** கண்ணகி யம்மையார்,

**எல்லோரும்:** வாழ்க!

**கொடிச்சி** பத்தினித் தெய்வம்,

**எல்லோரும்:** வாழ்க!

---

## காட்சி 3

இடம் பேராற்றங் கரை

காலம் மாலை

[ஆற்றங் கரையிலே அமைத்த பாடி வீட்டுக் கருகில் மணல் மேட்டிலே சேரன் செங்குட்டுவன் வீற்றிருக்கிறான். அவன் அருகிலே சேர நாட்டரசி வேண்மாள் அமர்ந்திருக்கிறாள் அவர்களுக்குச் சிறிது தொலைவிலே இளங்கோவடிகள், சீத்தலைச்சாத்தனார், அழும்பில்வேள், வில்லவன்கோதை ஆகியோர்களும் மற்றும் பல பெருமக்களும் அமர்ந்திருக்கின்றனர். படைவீரர்கள் ஆங்காங்கே அமர்ந்துள்ளனர்.]

**செங்குட்டுவன்:** (வேண்மாளை நோக்கி) கால் வலியோ? சோர்ந்திருக்கிறாயே! முதலிலேயே நீ இங்கேயே இரு என்றேனே, ஏன் மலைமேலெல்லாம் அலைந்தாய் எங்களுடன்?

**வேண்மாள்** : (புன்முறுவலுடன்) கால் வலி சிறிது உண்டு தான். எனினும், உள்ளத்திலேயிருந்த வலியெல்லாம் ஓடிவிட்டது. கோங்கு, வேங்கை, கொன்றை, நாகம், திலகம், சந்தனம் முதலிய மரங்கள் பூத்துக் குலுங்கிப் புதுமணப் பெண்கள் போல இனிமையாகக் காணப்பெற்று இன்றும் என் கண்முன்னே ஓவியம் போல் தோன்றுகின்றன.

**செங்குட்டுவன்** . ஆம், அம்மலர் மரங்களிலிருந்து விழுந்த மலர்களையெல்லாம் நிறைய அணிந்து நீ கூறியவாறு புது மணப்பெண் போல இந்தப் பேராறு 'புனல் யாறு அன்று பூம்புனல் யாறு' என்று கூறும்படி மெல்லெனத் தவழ்ந்து செல்வது எத்துணைய இனிய காட்சி! மலையணிந்த மலர் மாலை புரள்வதுபோல அசைகிறதே... உம். . இளங்கோ கண்டதென்னவோ?

**இளங்கோ** . இசையின் சிறப்பைக் கண்டோம் அண்ணா!

**சாத்தனார்** : ஆம்! இசையின் கலைச்சிறப்பை என்னென்பது!

**செங்குட்** : என்ன அது?

**இளங்கோ** : ஒரு தினைப்புனத்திலே யானையொன்று புகுந்துவிட்டது. பரணின்மேல் வேட்டுவச்சிறுமியொருத்தி, மலர்க்கொம்பென நின்றாள். அவள் எங்ஙனம் இந்த யானையை ஓட்டுவாளோ என்று திகைத்து நம் வீரர்களை ஏவினோம். அவர்கள் செல்லுமுன் அப்பெண் ஒரு குறிஞ்சிப்பண்ணை யாழில் இசைத்துப் பாடினாள். என்னென்பது? அந்தக் களிறு தன் வாயிலிருந்த கவளம் சோர அப்படியே நின்றுவிட்டது. அப்புறம் நம் வீரர்கள் அதனை விரட்டினர். இன்னும் அந்தக் குறிஞ்சி

யிசை மெய்யெலாம் பரவி யின்ப அருவிபோல மகிழ்ச்சி யூட்டுகிறது.

**சாத்தனார் :** போரும் அம்புக் கஞ்சாத களிறு யாழின் இசைக்கு வசமாகியதாலேதான் வீரர்களின் விரட்டுதலுக்குப் பணிந்து சென்றது.

**செங்குட் :** உண்மையே இசையே இவ்வுலகையெல்லாம் இன்பநிலையமாக்கிவிடும். வில்லவன் கோதை கண்டதென்ன ?

**வில்லவன்** (எழுந்து வணங்கி) அரசர் வாழ்க ! நானும் அமைச்சருமாக ஒரு வீரச் செயலைக் கண்டு களித்தோம். கொடும் புலியுங் கருங் களிறுமாக ஒன்றையொன்று தாக்கியபோது எங்கள் உள்ளம் ஓரெழுச்சியிலே தாவியது. இறுதியில் யானை வீழ்ந்தது.

[வேடர் தலைவனும் தலைவியும் வேடர்களுடன் வருகிறார்கள். அவர்கள் யானைத் தந்தங்கள், அகிற் கட்டைகள், கவரிமான் மயிர், தேன் குடங்கள், சந்தனக் கட்டைகள், ஏலக்கொடிகள், மிளகுக் கொடிகள், கூவைக் கிழங்குகள், தேங்காய்கள், மாங் கனிகள், பலாப்பழங்கள், கரும்பு, பாக்குக்குலை, வாழைக்குலை, சிங்கக்குட்டி, புலிக்குட்டி, கரடிக்குட்டி, குரங்குக்குட்டி, மலையாட்டுக்குட்டி, மான்குட்டி, கத்தூரிக்குட்டி, புனுகுப்பூனைக்குட்டி, யானைக்கன்று, கீரிப்பிள்ளை, மயில், கோழி, கிளி முதலியவற்றைக் காணிக்கையாகக் கொண்டுவந்து பணிந்து நிற்கிறார்கள். மிருகங்களின் குட்டிகளை வீரர்கள் வாங்கிப் பிணித்து வைக்கிறார்கள். மற்றப் பொருள்களை ஒழுங்காக எடுத்து வைத்துக்கொள்ளுகிறார்கள்.]

**செங்கு.** வேட்டுவர் தலைவ! அமர்க! எல்லோரும் அங்கங்கே அமருங்கள். (அவ்வாறே அமர்கிறார்கள்) நலந்தானே?

**கொடியான்.** (வணங்கி) சேரர் பெருமான் வாழ்க! தங்கள் அருளால் நலந்தான். காணாத புதுமையொன்றைக் கண்டோம், அதைக் கூறவே வந்தேன்.

**செங்கு.** மிகச் சிறந்த புதுமையோ! கூறுக!

**கொடியான்.** மிக மிகச் சிறந்தது, தன் கற்பின் பெருமையாற் பாண்டி நகரை—மதுரையை—எரித்துப், பாண்டியனைத் தன் குற்றமுணர்ந்து—இறக்கச் செய்த ஒரு பத்தினியாம்—பெயர் கண்ணகியாம்—செங்கோட்டிலே பதினான்கு நாள் தவமிருந்து, தெய்வவுடம்பு பெற்றுக் கணவனுடன் விமானத்திலே வானத்திற் சென்றாள். என் இரு கண்கள் மட்டுமல்ல, எல்லா வேடர்களின் கண்களுங் கண்டன. என் தலைவி கொடிச்சியுங் கண்டனள். அந்த அம்மையை நாங்கள் தெய்வமாகக் கொண்டாடினோம்.

**செங்கு.** (வியப்புடன்) நீ கூறுவது உண்மையா?

[புலவர்கள் முகத்தையும் அமைச்சன் முதலானோர் முகத்தையும் நோக்குகிறான். சீத்தலைச் சாத்தனார் தவிர மற்றையோர் நம்பவில்லை.]

**வேடர்கள் எல்லோரும்** (ஒரே குரலாக) உண்மைதானுங்க! உண்மைதானுங்க!

**கொடியான்.** (புன்முறுவலுடன்) பொய்யாயிருந்தால் ஏன் சொல்கிறேன்? அதுவுந் தங்கள் திருமுன்னு சொல்வேன்?

**சாத்தனார் :** (எழுந்து) அரசர் பிரான் வாழ்க! அந்த வேடர்தலைவர் கூறுவது முற்றும் உண்மை. அப்போது நான் அங்கேதான் இருந்தேன். இயற்கையல்லாத இந்நிகழ்ச்சி உண்மையில் நிகழ்ந்ததே, விளக்கமாக என்னால் கூறவியலும்.

**செங்குட் :** அங்ஙனமானால் அமர்ந்து தெளிவாகப் பகருங்கள்.

**சாத்தனார் :** (அமர்ந்து) கண்ணகியென்னும் அந்தக் கற்புக் கனியான அம்மையைப் பத்தினித் தெய்வமென்னலாம். மேலும் மதுரைக்கும் மன்னர்க்கும் நேர்ந்த இப்பழிக்கு யாவரும் வருந்த வேண்டியதே—பாண்டிய மன்னரின் கோப்பெருந்தேவியின் சிலம்பை ஒரு பொற்கொல்லன் போக்கடித்து விட்டானோ திருடிக்கொண்டானோ தெரியாது. அவன் இந்த அம்மையாரின் கணவர் இவருடைய சிலம்பை விற்க வந்தபோது சந்தித்தான், சிலம்பையும் பார்த்தான். அரசியின் காணமற்போன—சிலம்புடன் ஒப்பிடக் கூடியதாயிருக்கவே, அவரையே திருடனென அரசரிடம் கூறிக் கொலைசெய்ய வழி செய்துவிட்டான்.

**செங்குட் :** (இரக்கத்துடன்) அந்தோ! அப்புறம்?

**சாத்தனார் :** அரசரும் ஊழ்வினையால் அவரையுஞ் சிலம்பையும் கொண்டுவரக் கூறுமற் கொன்று சிலம்பைக் கொண்டுவரப் பணித்துவிட்டார். அப்பழிவினையும் முடிந்தது.

**செங்குட் :** (கண்கலங்க) கொடிது! கொடிது!

**சாத்தனார் :** பிறகே அந்த வியக்கத்தக்க நிகழ்ச்சிகள் நடந்தன! இந்த அம்மையார் இதைக் கேள்வியுற்

றடைந்த வருத்தத்தை யாவரால் அளக்கவியலும்? மூர்ச்சையடைந்தனர்! தெளிந்தெழுந்தார்! தம் கணவருக்குற்ற பழிச்சொல்லை நீக்கக் கருதிக் கதிரவனை விளித்துக், 'கள்வனோ என் கணவன்?' என்று கதறினார்.

**வேண்மாள்.** (மெய்சிலிர்க்க) அப்போது?

**சாத்தனார்:** வான்மொழியாக, 'கருங்கயற்கண் மாதராய்! உன் கணவன் கள்வனோ? அல்லன்! இவ்வூர் ஒள்ளெரியுண்ணும்' என்றான் கதிரவன். கேட்ட நகர மக்கள் நடுங்கினர். கைகுவித்துக் கண்ணகியாரைப் போற்றினர்.

[வேண்மாள் இருகைகளையும் குவிக்கிறாள். கண்ணீர் விடுகிறாள்]

**செங்குட்:** பிறகு!

**சாத்தனார்:** மாண்பு மிக்க அந்த மங்கை நல்லாள் தனது மற்றொரு சிலம்பைக் கையிலேந்திக் கண்ணீர் பெருகப் புழுதிபடிந்த மெய்யும், விரிந்த கூந்தலுமாக, நகர மாந்தர் நடுங்கிக் கைகூப்பத், தெருவழியே சென்று கணவரைக் கொலைக்களத்திற் கண்டு கதறியழுதார். கண்ணுக்கினிய கணவரின் இரு மெய்த் துண்டுகளையும் ஒன்றுசேர்த்தார். அவர் உண்மையாகவே உயிர்பெற்று மனைவியாரின் கண்ணீரைக் கையால் மாற்றி 'இரு' என்றார். அவ்வளவிலே முன்போல் ஆவி பிரிந்தது!

[எல்லோரும் வியப்புடன் 'ஆ! ஆ!' என்கின்றனர்.]

**வேண்மாள்:** (பரபரப்புடன் நாக்குழற) மேலே கூறுங்கள்!

**சாத்தனர் :** அப்புறம் கண்ணகியார் துக்கமும் சீற்றமும் பொங்கிய உருவுடன் பாண்டியர் முன்சென்றார். அரசரிடம் தம் சிலம்பை விற்கவந்த தம் கணவரைக் கள்வனெனக் கொன்றது தவறெனக் கூறினார் தம் சிலம்பின் அடையாளம் அதனுள்ளிடுபரல் மாணிக்கமாக இருக்குமென்றார். அரசரும் அச் சிலம்பைக் கொணடுவரச் செய்து அம்மையார்முன் வைத்தார். அவர் அதனை யுடைத்தார், மாணிக் கப் பரல்கள் தெறித்தன ! அரசர் திடுக்குற்றுப், 'பொன்செய் கொல்லன் தன் சொற்கேட்ட யானே அரசன்? யானே கள்வன்! தென்புலங் காவல் என் முதற் பிழைத்தது! கெடுக என் ஆயுள் !' என வீழ்ந்திறந்தார்.

**செங்குட் :** (துக்கத்துடன்) ஆ ! நன்றே செய்தார் அந்த அரசர் ! எங்களைப் போன்ற வேந்தர்களின் செவி யிலே அவர் செய்த மறமுறை படுமுன் உயிர்விட்டு அறமுறையாக்கிவிட்டார் ! கொடுங்கோலைச் செங் கோலாக நிமிர்த்திவிட்டார் ! அந்தோ ! அரசனாக இருப்பது எத்துணை இடுக்கண் ! மழை பெய்யா விட்டாலும் அரசனைப் பழிப்பர்? எங்கேயாவது தவறு நேர்ந்தாலும் அரசனைப் பழிப்பர் ! அரசன் கடவுளா—என்ன? சிறு தவறும் நேராமல் காப்பது எப்படி ? உண்மையில் அரச வாழ்க்கை மிகவும் சிக்கலானது ! இனிமையைப் பூசிய நச்சுணவுதான் அது ! அப்புறம் கூறுங்கள்.

**சாத்தனர் :** அரசரின் அருகேயிருந்த கோப்பெருந்தேவி யார் இந்த நிகழ்ச்சியாற் கலங்கிக், 'கணவரையிழந் தோர்க்குக் காட்டுவதில்லை' என்று கூறியவாறு

கண்ணகியாரின் இணைமலரடி தொழுது வீழ்ந்து உயிர் நீத்தார். [எல்லோரும் வியப்படைகின்றனர்.]

**வேண்மாள்:** (கைகுவித்து) ஆ! அறக் கற்பு! அறக் கற்பு!!

**செங்குட்:** பாண்டியரும் அவர் துணைவியாரும் நாம் தொழுந்தகையராய்—ஒழுக்கத்தின் எடுத்துக்காட்டாய்விட்டனர்! அவர்கள் வாழ்க! அப்புறம் கூறுங்கள்!

**சாத்தனார்:** கண்ணகியார் பிறகு மதுரையை மும்முறை வலம் வந்து, 'கோநகரைச் சீறினேன் குற்றமிலேன் யான்! இந்நகர் எரிக!' என்று சீறினார். (கண்ணீர் வடிய) அந்தோ மதுரை—சங்கமிருந்த மதுரை, தமிழ் கொழித்த மதுரை! அழகிய மதுரை வளம் நிறைந்த மதுரை எரிந்து சாம்பலாகியது! பிறகு, அந்த அம்மையார் பாண்டியரின் கொடுங்கோலைத் தங்களுக்குத் தெரிவிக்க வந்தவர்போல் இங்கு வந்தார் போலும்! அப்போதுதான் வேடர்கள் கூறிய வாறு தெய்வ மெய்யுடன் கணவரையடைந் திருத்தல் வேண்டும்.

**செங்குட்:** (அரசியை நோக்கி) அன்பே! கோப்பெருந் தேவி, கண்ணகியென்னும் இருவரிற் கற்பிற் சிறந் தோர் யார்?

**வேண்மாள்:** (கண்ணீர் ததும்ப) பாண்டியர் மனைவி தன் கணவன் உற்ற பிரிவு பொறாமல் உயிர்விட்டுக் கணவனுடன் சேர்ந்தாள், நாம் நம் நாடு நாடிய கண்ணகியை வழிபடல் வேண்டுமென்று விரும்பு கிறேன்.

**செங்குட் :** (புன்முறுவலுடன்) நன்று! அங்ஙனமே ஆகுக!

**வேடர்கள் :** பத்தினித் தெய்வம் வாழ்க! அரசர் வாழ்க! அரசியார் வாழ்க!

**செங்குட்** வேடர்களே! உங்களால் இன்று ஒரு நற் செயலிலே ஈடுபடத் தொடங்குகிறோம். கண்ணகி யார்க்குக் கோயில் கட்டிச் சிலை நட்டு வழிபடுவோம். கண்ணகி வாழ்க! கற்பு நெறி வாழ்க!

---

## காட்சி 4

இடம் ஆரிய நாட்டில் உத்தர தேசம்.
காலம்: இரவு.

[கனகவிசயர் அரண்மனையில்—விருந்து மண்ட பத்தில ஒரு விருநது நடககிறது. விருநதிலிருந்த வாகளிற சிறநதோா கனகன், விசயன, உததரன், விசித்திரன், உருதிரன், தனுத்தரன், சிததிரன், பைரவன், சிஙகன், சிவேதன் என்போா ஒரு துறவியும இருககிறார். பொற் கிண்ணஙகளிலே பல வகைக் கறிகளுடன உணவு படைக்கப்பட்டுள்ளன.]

**கனகன் :** நண்பர்களே! நான் அழைத்ததற்கிணங்கி வந்த தற்கு மிகவும் மகிழ்கின்றேன். வேண்டியதை உங்கள் அரண்மனை போலவே எண்ணி விரும்பும் அளவு வேண்டியதைக் கேட்டு உணணுங்கள்.

**உத்தரன் :** எங்களை உடனிருந்துண்ண அழைத்ததற்கு எங்கள் நன்றி. [எல்லோருமுண்ணுகிறார்கள்.]

**விசயன் :** (உண்டவண்ணம்) பீமனைப் போன்ற சமையற் காரன் மேற்பார்வையிலே தயார் செய்யப்பட்ட

உணவு அதிலும் சுவையான கறிவகைகளும் இனிப்புப் பண்டங்களும் மிகுதியாக உள்ளன. கூச்சமின்றிக் கேட்டுப் புசியுங்கள். (பணியாட்கள் படைக்கிறார்கள்) வீரன் போர்க்களத்திலே எதிரிகளை ஒழித்து விடுவதைப் போல உணவை ஒரு கை பாருங்கள்.

**கனகன் :** மேற்கோள் மாற்றிச் சொல்லப்பட வேண்டும் விசயா!

**பைரவன் :** (உணவு படைப்பவன் அதிகமாகப் படைக்கிறதைக் கண்டு) போதும்! போதும்! ஐயையோ! வேண்டாம்!

**விசயன் :** (நகைத்து) பைரவா! போர்க்களத்திலே அஞ்சாத நீ உணவறையிலே அஞ்சலாமா?

**பைரவன்** உயிருள்ளவரையிற் போர் செய்யலாம். உணவு உள்ளவரையில் உண்ண முடியுமா! [உண்கிறான்]

**துறவி :** வேண்டாம் என்று கூறிப் போதுமென்று திருப்தியடையும் பொருள் உணவு ஒன்றுதான். ஆகவே தான், சோற்றுக்கொடை சிறந்ததென்கிறார்கள். [உண்கிறார்.]

**தனுத்தரன் :** (உண்டவாறே நகைமுகத்துடன்) இங்கே கொடை என்ற சொல்லுக்குச் சற்றுமேயிடமில்லை. நண்பர்கள் கூடியுண்ணும் நல்விருந்து துறவியார்க்கு எல்லா இடமும் ஒன்றுபோற்படுகிறது போலும்.

**மற்றொரு துறவி :** ஆம்! தவறுதான்! அவர் சிந்தனையின்றிச் செப்பிவிட்டார்! மன்னர் மன்னர்கள் உண்ணுமிடத்திலே உணவைப்பற்றித்தான் பேச

வேண்டும். வீரத்தைப்பற்றியோ ஈகையைப்பற்றியோ பேச்சு எதற்கு?

[நகை முகத்துடன் எல்லோரையும் நோக்குகிறார்]

**முதல் துறவி.** (அவர் பார்வையிலுள்ள இகழ்ச்சியை யுணர்ந்து) நம்மைப் போன்று சோற்றையே விரும்பி அரண்மனைகளுக்குப் போகின்ற துறவிகளைக் குறித்தே கூறிவிட்டேன். மேலும் அரசர்களுடைய இயல்பு அரசர்களுக்குத் தெரியுமா? மன்னர் மன்னர்கள் எங்களைப் பொறுத்தருள வேண்டும்.

**விசித்திரன்.** (நாணத்துடன்) துறவிகள் நம்மை மன்னர் மன்னர்கள் என்று கூறுவது இகழ்ச்சி போலவே படுகிறது. சிறந்த துறவிகளைப் பெருமையுடன் நடத்தவேண்டும். தனுத்தரன் அதிகமாகப் போனதாலேயே இவ்வளவு வந்தது.

**தனுத்தரன்:** (சினத்துடன) என்ன கூறிவிட்டேன்?

**முதல் துறவி:** (அமர்ந்த நோக்குடன்) வேண்டாம், விடுங்கள்! இரப்போனுக்குரிய பண்புடன் நான் பேசினேனென்று தானே அவர் குறிப்பிட்டார்? அதனால் என்ன? எங்கள் வாழ்க்கையே அதுதானே?

**விசித்திரன்:** நீங்கள் எப்படி உங்களை எண்ணிக் கொண்டீர்களோ, அதைப்போலவே எங்களையும் நாங்கள் எண்ணிக் கொண்டால் அதிலுள்ள பிசகு என்ன? தமிழ் மன்னன் ஒருவன்—சேரநாட்டரசன்—வந்து இந்த அரசர் பெருமக்கள் இருந்த இந்த நாட்டை வென்று இமயத்தில் வில்லொன்றைப் பொறித்துச் செல்லும்போது, இங்குள்ளோர்

எல்லோரும் பெண்களைப் போலப்—பேடிகளைப் போல—இருந்ததை யெண்ணியே துறவியார் நகைத்துக் கூறியிருத்தல் வேண்டும் என்று நினைக்கிறேன். [எல்லோரும் திமிரநது நோக்குகிறார்கள்]

**முதல் துறவி** உண்மையே கூறினீர்கள். என் கருத்து அதுவே.

**உருத்திரன்** (சினத்துடன்) போரின் தன்மையை அறியாத துறவிகள் இதைப்பற்றி நகையாடுவது கேவலம்! இவர்களுக்கு என் தனுவின் மூலம் அதன் கொடுமையைக் காட்ட வேண்டியதுதான். உணவை விழுங்குவது போலவே அம்பையும் விழுங்கட்டும். [எழுகிறான்]

**தனுத்தரன்** நன்று! அரசர்கள் இடும் உணவைத் தின்று கொண்டே அரசர்களை நகையாடும்—நன்மை செய்தாரைப் பழிக்கும்—இவர்களுக்குப் பாடங் கற்பித்தல் முதன்மைதான், இதோ நானும் வருகிறேன்.

**உருத்திரன்** (புன்னகையுடன்) நான் ஒருவனே போதுமே.

**சித்திரன்** (நகைத்து) நல்ல வீரர்களப்பா நீங்கள்! துறவிகள் மேலா போர் தொடுப்பது? அவர்கள் நம் குறையைக் கூறி நகையாடினால் நமக்கு மானவுணர்ச்சி யுண்டாதல் வேண்டுந்தான். ஆனால், அது போரிலே பழகாத துறவிகளோடு போர் தொடுக்கும் நாணமற்ற நிலையிலே வருதல் வேண்டாம். அந்தத் தமிழ்நாட்டானை எப்படியாவது தோல்வியுறச் செய்தல் வேண்டும் என்ற நிலையிலே வருதல் வேண்டும்.

**கனகன் :** சித்திரர் கூறியது உண்மையே. தமிழன் நம் நாட்டை வென்று சென்றதை நினைத்து நாணமுருமல், ஒன்று கூடி உணவுப் போர் செய்து கொண்டு சாப்பாட்டிராமன்களாக இருக்கிறோமென்பதைச் சுட்டிக் காட்டியவர்களைப் பாராட்ட வேண்டுமே யொழிய ஒறுக்க முற்படுவது முறையாகாது. ஆகையால், நீங்கள் சினத்தை நீக்கி அமர்ந்து வயிருரப் புசித்தெழுந்து தமிழ்நாட்டானை வெல்வதைப் பற்றிச் சிந்திக்க வாருங்கள்.

[உருத்திரனுந் தனுத்தரனும் நாணத்துடன் கீழே நோக்குகிருர்கள்]

**விரயன் :** சிந்திப்பதென்ன? முன் அந்தத் தமிழன் வந்த போது நாம் இல்லை. ஒற்றுமையில்லாத இவர்கள் தோல்வியுற்ருர்கள். இப்போது நாளொருவனே அவனை யெதிர்த்து வெல்வேன். உணவின் இடையிற் கூறும் இச்சொற்களை உறுதியாக நம்புங்கள்.

**கனகன் :** (புன்னகையுடன்) நன்று விசயா! நானும் அவ்வாறே உறுதி யளிக்கிறேன்.

**முதல் துறவி :** (மகிழ்ச்சியுடன) மிகவும் மகிழ்ச்சி. அவ்வாறு உறுதிசெய்ய வேண்டுமென்றே இவ்வாறு பேச்சை வளர்த்தேன். உருத்திரனுந் தனுத்தரனும் இவ்வாறு தகாத வழியிலே சினங்கொள்ள அது காரணமாகுமென்று நினைக்கவில்லை. உண்மையிலேயே அவர்கள் எங்களோடு போர் செய்ய விரும்பினல் அம்பை விழுங்கக் கட்டளையிட்டால் விழுங்கவும் தயாரா யிருக்கிறோம். (இடக்கையிலுள்ள யோக தண்டத்தைக் காட்டி) இஃது ஒன்றே

விழுங்கும். வேண்டுமானால் வசிட்டரையும் கௌசிகனையும் மனத்திற்கொள்ளட்டும்.

**விசயன்** விருந்தினர்களாகிய நீங்கள் அருள் செய்து அவர்களைப் பொறுத்தல் வேண்டும். 'துறவிக்கு வேந்தன் துரும்பு' என்பதை அவர்கள் நினைக்க வில்லைபோலும். எளிய பிச்சைக்காரர்களைப் போன்று எண்ணிவிட்டார்கள். எங்கள் வேண்டு கோளுக்கு இணங்கிவந்த உங்களை அவர்கள் நோகச் செய்தமைக்கு வருந்துகிறேன். அவர்கள் இப்போதே மன்னிப்புக் கேட்கவேண்டும்.

**கனகன் :** போதும்! அவர்களும் விருந்ினர்களே, நாம் அவர்களைக் கட்டாயப்படுத்துதல் பெருமையாகாது. துறவிகளே மன்னித்துவிட்டதை நீயேன் கிளறுகிறாய்?

**இ—துறவி :** நாங்கள் சினங் கொள்ளாதபோது விசயர் கவலைப்பட வேண்டிய காரணமில்லை. எங்களுக்கு எல்லாம் ஒன்றே. கனகர் எங்கள் சார்பிலே கூறியது உண்மை. எல்லோரும் ஒன்றுபட்டுத் தமிழரசனை வெல்வீர்களாக!

**தனுத்தரன்—உருத்திரன் .** துறவிகள் தங்களுடைய பொறுமையினால் எங்கள் பிழையைப் பொறுத்தருளிய தற்கு எங்கள் வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். சினம் தீது என்பதை உணர்ந் தோம்.

[எல்லாரும் மீண்டும் உண்பதில் முனைகின்றனர்]

# காட்சி 5

இடம் வஞ்சிமாநகர், சேரன் செங்குட்டுவன் அவைக்களம்.
காலம் மாலை.

[சேரன் செங்குட்டுவன், வில்லவன்கோதை அழும்பில்வேள், இளங்கோவடிகள் முதலானோர் அமர்ந்திருக்கின்றனர்.]

செங்குட் : அன்பர்களே! அன்று நாம் பேரியாற்றங் கரையிலே கண்ணகியை வழிபடுவதென்று முடிவு செய்தோம். அரசியல் அல்லல்களால் ஒரு திங்களாக அதுபற்றி முயலாதிருந்து விட்டோம். இனியும் காலம்போக்கல் ஏற்றதன்று. விரைவிலே கண்ணகிக்குப் பத்தினிக்கல் நடவேண்டும். அரசியல் சூறுவளியிலே அலையுண்டவுள்ளம், 'எங்கிருந்து கல் கொண்டுவருவது? எங்கு நீராட்டுவது?' எனச் சிறிதும் நினைவுகொள்ள முடியாமல் சோர்வுற்றிருக்கிறது. நீங்களே ஒரு முடிவுக்கு வர வேண்டும்.

அமைச்சன் : அரசே! தாங்கள் அறியாததில்லை. தமிழ் நாட்டிலேயே கல் கொண்டுவர விரும்பினுற் பொதியத்திலெடுத்துக் காவிரியிலே நீராட்டல் வேண்டும். அவ்வாறின்றி வடநாடு சென்று இமயத்திற் கல்லெடுத்துக் கங்கையில் நீராட்டலாம். இவற்றில் நம் வீரத்துக்கேற்றதையே செய்தல் வேண்டும்.

செங்குட் : தக்கதே கூறினீர்! நமக்கு இமயத்தரசன் ஒரு கல் கொடானென்னிற் போரிலிறங்குவோம். வில்லவன்கோதை! நின் கருத்தென்ன?

**வில்லவன் :** (எழுந்து) அரசர்பிரான் வாழ்க! வஞ்சி நகரத்தாராகிய நாம் எப்போதும் வஞ்சி சூடுவோம். வஞ்சியாமற் போர் புரிவோம். நம் எதிரிகளின் உள்ளம் அச்சத்தால் அலற இமயத்திற்கே செல்வோம்.

**அழும்பில் வேள :** (எழுந்து) நாம் வஞ்சி சூடினால், நம் எதிரிகள் காஞ்சி சூடாமல் என்ன செய்வார்கள்? வாழ்க்கை நிலையாமையை உணர்த்துவது காஞ்சி தானே?

**செங்குட் :** நல்லது உம் வீரமொழி!

**வில்லவன் :** சோழனும் பாண்டியனும் நம்மொடு பகைத்துக் கொங்கர் செங்களத்திற் செய்த போரில் அவர்கள் மீனக்கொடியையும் புலிக்கொடியையும் எறிந்து ஓடியது எட்டுத் திக்கிலும் பரவியுள்ளதே! தமிழ் நாட்டெல்லையிலே கொங்கணர், கலிங்கர், கருநடர், வங்கர், கங்கர், கட்டியர், ஆரியர் முதலானோரொடு நடத்தப்பெற்ற போரிலே தாங்கள் கொல்களிற்றின்மீது உலாவியது என் கண்ணிலே ஓவியப் படுத்தப் பெற்றுள்ளது. தங்கள் அன்னையாரைக் கங்கையில் தீர்த்தம் ஆட்டுதற்பொருட்டு இமயத்திற்குச் சென்றபோது நூற்றுவர் கன்னரொடு தாங்கள் தனித்துநின்று செய்த போரைக் காலனுந் தன் கண்கொண்டு காணக் கலங்குவான். ஆகவே, போரை விரும்பினால் வெற்றி நம் கையிலேதான். இதனை ஆரியவரசர்க் கறிவித்தல் வேண்டும்.

**அழும்பில் :** அவர்களுடைய ஒற்றர்களே சென்று செப்பி விடுவர். தூதரையனுப்புதல் வேண்டாம். நம் வீரர்கட்கே பறையறைந்து தெரிவித்தல் வேண்டும்.

**செங்குட் :** நன்று, நன்று! என்று நன்றென்று பார்த்து நவில்க!

**இளங்கோ :** நாளை நின்று மறுநாள் நல்லநாள்.

**செங்குட் :** நன்று! அன்றே வாளை வடக்கனுப்புவோம். பறையறைந்து தெரிவிக்கச் செய்வது அழும்பில் வேள் பணி!

**அழும்பில் :** (வணக்கத்துடன்) ஆணைப்படி அரசே!

---

## காட்சி 6

இடம் வஞ்சியில் ஒரு தெரு

காலம் காலை

[வள்ளுவன் யானைமீது பறையறைந்துகொண்டு வருகிறான்]

**வள்ளுவன் :** தமிழ் வாழ்க! தமிழ்நாடு வாழ்க! நம் அரசர் செங்குட்டுவர் வாழ்க! (பறையடித்தல்) யாவரும் அறிக! பத்தினி கண்ணகிக்குக் கல் நட வேண்டும். அதற்கு வடநாடுசென்று இமயமலையி லிருந்து கல் கொண்டுவர அரசர் புறப்படுகிறார். ஆகையாற் போர் வீரரெல்லோரும் புறப்படுக! இது சேரர்பெருமான் ஆணை.

[பறையடிக்கிறான், யானை செலகிறது.]

**ஒரு வீரன் :** (அருகிலிருப்பவனிடம்) கேட்டையோ? அண்ணே! நம் மன்னர் நீண்டநாள் வாழ்க! போர் புரிய வழி புரிந்தாரப்பா! சண்டையில்லாமற் செத் தவராகக் கிடந்தோமே!

**மற்றவன் :** ஆமாம் அண்ணே! நமக்கெல்லாம் போர் தானே உயிர்? போர் செய்யாத நாளெல்லாம் வாழ்ந்த நாளாகக் கணக்கிலே வைக்கப்படுமா நமக்கு? [செல்கிறார்கள்.]

**எல்லப்பன்** அடே செல்லப்பா! இப்போது எதற்கடா சண்டை?

**செல்லப்பன் :** வள்ளுவன் சொன்னதைக் கேட்கலையா? என்னமோ கண்ணகிக்குப் பத்தினிக்கல் கொண்டு வர வேண்டுமாம்! என்னமோ அண்ணே! ஒன்றும் புரியவில்லை!

**எல்ப :** (திடுக்கிட்டவன் போல) அப்படியா? அடடே! நீ இப்போதுதானே மணஞ் செய்துகொண்டாய்? எப்படியடா விட்டுவிட்டுப் போகமுடியும்?

**செல்லப் :** என்ன செய்யலாம்? ஆணை யென்றால் ஆணை தானே?

**எல்லப** அதைத்தான் நானும் சொல்கிறேன். என்னவோ போலத்தான் இருக்கும் உனக்கு? காலன் வாயில் விழுந்து எழவேண்டும்! நாமெப்படி யாவது போகலாமென்றாலும் நம் வீட்டுப்பெண்கள் எப்படிப் பொறுப்பார்கள்?

**செல்லப் :** போருக்குச் சென்றால் எவ்வளவு காலமாகுமோ! வருவதற்குள் காதற்கன்று செத்துப்போய்விட்டால் நம் காதலிகளைக் காண்போமோ என்னவோ? ஆனால், ஒன்று. என் வீட்டுக்காரி நான் போருக்குப் போக மிகவும் சம்மதிப்பாள்.

**எல்லப் :** ஏன்? அவளுக்கு உன்மேல் விருப்பமில்லையா?

செல்லப் : அப்படியில்லையண்ணே! அவள் எப்போதும் வீரர்களைப்பற்றியே பேசுவாள். என்னையும் என் வீரத்தைக் காட்ட போருக்குப்போக வற்புறுத்துவாள். நான்தானண்ணே (நாணத்துடன) அவளைப் பிரிய விரும்பவில்லை

எல்லப் : என் வீட்டிலும் அவ்வாறுதானண்ணே! எனக்கு அவள்மேற் காதல். அவளுக்குப் போர் மேற் காதல்! ஆனால், நான் இதுவரைக்கும் போரில் விருப்பமுடையவனாகவே அவளிடம் நடந்துவந்திருக்கிறேன்.

செல்லப் : அப்படியானால் போருக்குப்போவது உறுதி. நாம் போகாவிட்டாலும் நாம் மணந்த வீரத்தாற் போய்த்தானாகவேண்டும்.

---

## காட்சி 7

இடம் வஞ்சி யரணமனைப் பூஙகா.

காலம். மாலை.

[சேரன் செங்குட்டுவன உலாவுகிறான். ஒவ்வொரு பூஞசெடியையும மலாமரதனதையும பார்க்கிறான் தோட்டப பணியாளா உடன்வருகின்றனர்.]

செங்குட் : நாம் வடநாடு சென்று திரும்பிவரும் வரையில் இம்மலர்ப் பொழில் எக்குறையுமின்றி யினிது காக்கப்படுதல் வேண்டும்.

பணியாளர் தலைவன் (கைகுவித்து) ஆணைப்படி அரசே!

[ஒரு காவலன் வருகிறான்.]

**செங்குட்.** என்ன?

**காவலன்.** (வணங்கி) இரு துறவிகள் தங்களைக் காண விழைகின்றனர்.

**செங்குட்.** நன்று, இங்கேயே எழுந்தருளட்டும். (காவலன் செல்கிறான், தோட்டக்காரரை நோக்கி) அந்த வாசந்தியும், முல்லையும் அரசிக்கு மிகவும் விருப்பமானவையென்பது நினைவிலிருக்கட்டும்.

**பணி—தலைவன்** (கைகுவித்த வண்ணம்) ஒரு குறையுமின்றிப் பார்த்துக்கொள்வோம்.

[துறவிகள் வருகிறார்கள்.]

**செங்குட்** (கைகுவித்து) அடிகளின் வரவால் நான் தூயனானேன். இந்தச் செயகுன்றிலே எழுந்தருளக! (இரு துறவிகளும் அமர்கிறார்கள். செங்குட்டுவனும் அமர்கிறான்) அடிகள் எங்கிருந்து வருகிறீர்களோ?

**ஒரு துறவி** சேரர் பெருமான் வாழ்க! நாங்கள் வடநாட்டுத் துறவிகள். கங்கையிலே நீராடினோம். காவிரியில் மூழ்கினோம். பொருநையிற் படிந்து குமரியிலே குளிக்கவேண்டிச் செல்கிறோம். போரிலே முழுகி நாட்டின நலத்திலே படிந்த பேரரசாகிய—தமிழ் மன்னரிற் சிறந்த—தங்களைக் காண வந்தோம்.

**செங்குட்:** (புன்முறுவலுடன் பணிவுதோன்ற) துறவிகளே பேரரசர்கள். மெய்க்காப்பாளரும் படையுமின்றி, எங்கும் உலவுவீர்கள். போர்க்கருவிகளின்றி யாவரையும் வென்று வணங்கச் செய்வீர்கள். உங்கள் அரண் கல்லாலும் சுண்ணாம்பாலுமானதன்று. அறிவாலும் புலனடக்கத்தாலும் ஆனது. எப்போதும் யாவராலும் அழிக்கமுடியா

தது. மேலும், உலகவலம் வந்து பலவகைப் பழக்க வழக்கங்களையும் அறிந்து பரவிய அறிஞர்களானீர்கள் !

**மற்றொரு துறவி** (புன்முறுவலுடன்) தங்களைப் பேரரச ரென்று கூறியதற்குப் பேச்சினாலே திகைக்கச் செய்கிறீர்கள். இளங்கோ அடிகளின் முன்னவரென் பதற்கேற்ற பேரறிஞராகவுள்ளீர்கள் ! உலகவலம் வந்த பரவிய அறிவு தங்களுக்கும் உண்டு.

**செங்குட் :** உலக வலம் வருதலின் என் நோக்கம் வேறு, தங்கள் நோக்கம் வேறு. என் மண்ணாசையே அங்கு எதிரில் நிற்கும். தங்களுக்கு அங்குள்ள அழகிய பல்வேறு இயற்கை யோவியங்களும் இறைவன் பேரருளும் எதிரில் நிற்கும். என்னோடு மறமே வரும் தங்களோடு அறமே வரும்.

**முதல் துறவி** (பேச்சை மாற்ற) வடநாடு சென்றிருக்கிறீர்களோ ?

**செங்குட் :** ஒருமுறை சென்று வந்தேன். என் அன்னையைக் கங்கைப்பேர் யாற்றில் தீர்த்தம் ஆட்டுவித்தற் பொருட்டு இமயம்வரை சென்றுவந்தேன்.

**இர—துறவி :** அப்போது ஆரியவரசர்களுடன் போர் நேர்ந்திருக்கும்.

**செங்குட் :** ஆம்.

**மு—துறவி :** ஒரு திங்களுக்குமுன் அங்கே ஒரு விருந்து நடந்தது. அவ்விருந்திலே கனகவிசயரென்போர்—பால குமரன் மக்கள்—தங்களைப்பற்றித்தான் அப்போது கூறியிருத்தல் வேண்டும் என்று நினைக்கிறேன்.

**செங்குட் :** என்ன கூறினார்கள்?

**மு—துறவி :** அவர்களில்லாதபோது தாங்கள் வடவாரியரை வென்றுவிட்டு வந்தீர்களாம். "இப்போது வந்து வெல்லமுடியுமா?" என்று கூறினர்.

**செங்குட்** (புன்முறுவலுடன்) அப்போது அவர்கள் எங்கே மறைந்திருந்தார்களாம்? இப்போதும் செல்வேன். எங்கள் நாட்டுப் பத்தினித் தெய்வத்திற்குக் கல் கொணர்வேன், இமயத்திலிருந்து. வந்து தடை செய்யட்டும். அவர்களுடைய தலையிலே சுமத்திக் கொணர்வேன் அக்கல்லை.

**இ—துறவி :** தமிழர் வீரத்தையறிவோம். இறைவன் தங்கட்கு வெற்றியளிப்பாராக! சென்று வருகிறோம்.

[இருவரும் எழுகிறார்கள்]

**செங்குட்** (எழுந்து கைகுவித்து) சென்று வருக! 'வஞ்சியான் எப்போதும் வஞ்சியான்' என்று அவர்களுக்குத் தாங்கள் திரும்பவும் செல்லும்போது செப்புக!

---

## காட்சி 8

இடம்: வஞ்சி மாநகரில் அரண்மனையைச் சார்ந்த விருந்து நிலையம்

காலம்: முன்னிரவு

[இரவைப் பகலாக்கும் எண்ணற்ற விளக்குகள் எரிகின்றன. ஆயிரக்கணக்கான வீரர்கள் வரிசை வரிசையாக அமர்ந்திருக்கின்றனர். அவர்கள் எதிரிற் பலவகையுண்டிகளும் பழங்களும் படைக்கப்பெற்றுள்ளன. அவர்களுடன் ஒருபுறமாகச் செங்குட்டுவன், வேண்மாள், இளங்கோவடிகள், வில்லவன் கோதை, அழும்பில்வேள் முதலானோர் அமர்ந்திருக்கின்றனர். நூற்றுக்கணக்கான பெண்கள் உணவுப் பொருள்களைப் படைக்கின்றனர்.]

**வில்லவன்:** (எழுந்து) வீரர்களே! அரசர்பெருமான் நம்முடன் சேர்ந்து உண்ண நம்மை அழைத்தார். ஆகவே, இந்நாள் நன்னாள் என்று கருதுகிறார். எண்ணற்ற வீரச்செயல்கள் புரிந்த கொற்றவரான அப்பெருமானுடன் அமர்ந்துண்ணும் பேறு கிடைத்ததற்காக நாம் நம்முடைய ஆரவாரத்தின்மூலம் மகிழ்வைத் தெரிவித்துக்கொள்வோமாக! (யாவரும் அரசர் வாழ்க! அரசர் வெல்க! என ஆரவாரித்தல்) இனி நீங்கள் யாவரும் அமைதியாகக் கூச்சமின்றி யுண்பீர்களாக! உண்ட பிறகு யாவரும் சொற்பொழிவு மண்டபத்திற்குச் செல்வீர்களாக!

[வில்லவன்கோதை அமர்கிறான். அரசன் உண்ணத் தொடங்கியவுடன் யாவரும் உண்கின்றனர்.]

**ஒருவன் :** (மற்றவனை நோக்கி) அடே முக்காற்படி! நன்ருக நிறையச் சாப்பிட்டா! இப்படிப்பட்ட உணவை எங்கே கண்டிருப்பாய்?

**மற்றவன் :** நான் முக்காற்படியானுல் நீ முழுப்படியடா! உன்னைப்போல யாரால் உண்ணமுடியும்? உனக்கு உடம்பெல்லாம் வயிருயிற்றே!

**மூன்ருமவன் :** எப்படிப்பட்ட உணவானுலும் இரு நாளைக்கு ஏற்குமா? அளவுக்குமேல் வயிறு ஏற்ருலும் அமுதமும் நஞ்சாகுமன்ரே? (பரிமாறுபவளிடம) கொஞ்சம் பாயசம் விடு.

**மற்ருெரு வீரன் :** (பரிமாறுபவளிடம) வேம்பு! இந்தப் பலாச்சுளையிலே கொஞ்சம் தேன் விடமாட்டாயா?

**அருகிலிருப்போன் :** (நகைத்து) அவள் வேம்பானுல் எப்படித் தேன் விடுவாள்?

**(மற்ருெருபக்கம்) செங்குட்டுவன் :** (இளங்கோவடிகளை நோக்கி) பலரோடுண்ணும் பண்பே தனிச் சிறப்பன்ரே? அமுதமாயினும் தனியே உண்பது நஞ்சே!

**இளங்கோ :** (புன்முறுவலுடன்) ஐயமென்ன அதனில்? (ஒரு முறை எல்லோரையும நோக்கி) இவ் வீரரெல்லாம் நம்மோடுண்பதிற் கொள்ளும் மகிழ்ச்சியே நமக்குச் சிறந்த பரிசு. தங்கள் உயிரை நமக்காக அளிக்கும் வள்ளல்களாகிய இவர்களுடன் உண்பது தான் பேரின்பம்.

**செங்குட் :** (கண்ணீர் ததும்ப) ஆம். என் ஒருவன் விருப்பத்திற்காகத்தானே இவ் வீரர்கள் வடநாடு வருகிருர்கள்? எளிய வீரர்களாகிய இவர்களுக்கு

நாம் எந்த வகையிலும் கடமைப்பட்டுள்ளோம். எனினும், நம் கடமை அவ்வகையிலெல்லாம் பேச்சளவிலேதான் நிற்பது, உருவமற்றது! அவர்கள் செய்யுந் துணைக்குக் கைம்மாறேது? நாம் இவர்கள் கையாலே போர் செய்து வெற்றியடைகிறோம். வெற்றிவீரரென்று பெயர் பெறுகிறோம்.

**வில்லவன்:** (புன்முறுவலுடன்) அரசர்பெருமானுடைய அருள் உள்ளம் மிகச் சிறந்ததே. எனினும், உலகமே அவ்வாறுதானே நடைபெறுகிறது? பலர் உழைப்பிலேதான் ஒருவன் இன்பம் அடைகிறான். தேனீக்கள் பல மலர்களிலிருந்து கொஞ்சங் கொஞ்சமாகத் திரட்டிய தேனை ஒருவன் அடையிலிருந்து பிழிந்து எடுத்துக்கொள்கிறான்.

**இளங்கோ:** உண்மையே. ஆனால், அந்தத் தேனீக்கள் போல இவ்வீரர்கள் பயனடையாமற் போவதில்லை. தங்கள் அரசர்க்கு வெற்றியைத் தந்து தாங்களும் புகழ் பெறுகிறார்கள்.

**செங்குட்:** ஆம், இவ்வீரர்கள் புகழ்பெறுவது மட்டும் போதுமா? நாம் அன்புடன் அவர்களை நடத்தவும் வேண்டும். மேலும், அவர்களின் புகழ் நம் புகழின் துளிகளேயன்றோ? அவர்களுக்கெனத் தனிப் புகழேது? [உணவு முடிகிறது]

---

## காட்சி 9

இடம்: வஞ்சியாண்மனையிற் சொற்பொழிவு மண்டபம்.
காலம்: அதே முன்னிரவு.

[உண்டபிறகு வீரரெல்லோரும் வரிசை வரிசையாக அமர்ந்திருக்கின்றனர். உயர்ந்த மேடையிலே கட்டில்களில் இளங்கோவடிகளும், வில்லவன்கோதையும், அழும்பில்வேளும் அமர்ந்துள்ளனர். சேரன் செங்குட்டுவனும் வேண்மாளும் மெய்காப்பாளர் சூழ மண்டபத்திற்குள் வருகிறார்கள். வீரர்களெல்லோரும் எழுந்து, 'சேரர்பெருமான் வாழ்க! அரசியார் வாழ்க!' என ஆரவாரிக்கின்றனர். இருவரும் மேடையின் மேலே அரியணையிலே அமர்கின்றனர். உடனே செங்குட்டுவன் எழுந்திருக்கின்றான்.]

**செங்குட்:** 'சேரநாட்டு வீரர்களே' நாம் இங்கு எதற்காகக் கூடியுள்ளோமென்பதை நீங்கள் அறிவீர்கள். நம் நாடு நாடிவந்த கண்ணகியம்மைக்குப் பத்தினிக்கல் நட்டு வழிபடல் வேண்டும். அதற்காக வடநாடு செல்கிறோம். இமயமலையிலிருந்து கல்லெடுத்துக் கங்கையிலே நீராட்டிக் கொணர்தல் வேண்டும். பத்தினிக்கல் நட்டு வழிபடுவதால் உண்டாகும் நன்மையை இளங்கோவடிகள் இயம்புவார்.

[அமர்கிறான்]

**இளங்கோ:** (எழுந்து) அரசர் பெருமான் வாழ்க! வீரர்கள் வாழ்க! நண்பர்களே! நமக்கு வேண்டியது—உயிரினும் மேம்பட்டது ஒழுக்கமே எனினும், ஒழுக்கந் தவறாமல் இருப்பது மிகவும் அரிது. அதனாலே, ஒழுக்கமுடையோர் யாவராலும் மதிக்கப்பெறுவர்.

ஒழுக்கமே உடலில் ஓடும் செந்நீராக—உயிராகக் கொண்டவர்கள் தாங்கள் நன்னெறியிற் செல்வ தூடன் தம்முடன் பழகுவோரையும்—தம்மைக் காண்போரையும் கூட—நன்னெறியிற் செலுத்து கிறார்கள். அத்தகைய சான்றோர் வாழும் நாடு உயர்ந்தது! மிகமிக உயர்ந்தது! அந்நாட்டிலே மக் களுள்ளம் செந்நெறியிற் செல்வதாலே பிணியும் வறுமையும் எட்டியும் பாராமற்போம்.

அவ்வாறே ஒழுக்கத்திற் சிறந்தோர் ஊனு டம்பைவிட்டு நீங்கவும் புகழுடம்போடு மக்களுள் ளத்திலே உலாவுவர். அவரை வழிபடவே கோயில் கள் அமைக்கிறோம். கோயிலிற் சென்று வழிபடு வதனாற் கொஞ்சநேரமாவது அவர்களை மக்கள் நினைப்பார்கள், தம்முள்ளத்திலே, அவர்கள் தூய நிலையைத் தொடுவார்கள். பலமுறை இவ்வாறு உள்ளத்திற்பட்டால் அவர்களுந் தூயவர்களாவார் கள். ஆகவே, பத்தினி வழிபாடு நமக்கு மிகவும் இன்றியமையாதது. [அமாகிறார்]

**செங்குட்:** (எழுந்து) ஆகவே, வடநாடு செல்கிறோம். நம் நாட்டிலே கல்லெடுப்பதைவிட வடநாடு செல் வது நம் வீரத்தை வெளிப்படுத்தும். வீரமென்பது மக்களின் உடம்புக்கு என்பு போன்றது. வீரமில் லாதவன் என்பிலாதவன், ஊன் பிண்டம், நடை யிலாப் பிணம், சாரமற்ற கோது, புலிக்குப் பொறை, மக்களிலே பதர்! நம் தமிழ்நாடு வீரத் திற் சிறந்தது!

வீரம் வெளியாகும் இடம் போர்க்களம். ஆகவே, போரென்றால் நம் தோள்கள் பருக்கின்

றன! துடிக்கின்றன! அதற்கு இப்போது வாய்ப்புக் கிடைத்துள்ளது! நாம் வீர வானிலே புகழ் ஊர்தியிலே உலாவ விரும்புகிறோம்! வீரக் கொற்றவை மணமாலை யேந்தி நம்மைப் புன்முறுவலுடன் அழைக்கிறாள். போர்ப்பசி மிக்க நமக்கு வடநாட்டிலே நல்ல உணவு கிடைக்கும்.

முன்னொருமுறை எம் அன்னைக்குப் பத்தினிக் கல் கொணர இமயம் சென்றோம் அப்போது பல ஆரியவரசர்களை வென்றோம். அந்த ஆரியக் கூட்டத்திலே அந்நாளிற் கனகவிசயரென்போர் இல்லையாம். அவர்கள் நம்மை இப்போது அறை கூவியழைக்கின்றனர்! தமிழகத்துள்ளி ஒவ்வொன்றும் வீரக் கூத்தாடுமென்பதை அவர்கள் அறியார் போலும்! இன்றேல் தமிழர் வீரத்தைத் தாழ்த்திக் கூறுவர்! (சீற்றத்துடன்) அப் பதர்களின் தலையிலே நம் பத்தினிக்குக் கல் கொண்டு வரவேண்டும்.

**வீரர்கள் :** நன்று! நன்று!

**செங்குட்** ஆரியர்கள் தமிழரைக் கனவிலெண்ணினுங் கலங்கி நடுங்குமாறு தாக்கித் தகர்க்கவேண்டும். அரணில் மறைந்திருந்தும், இருவர் பொரும்போது இடையேயும் அம்புசெலுத்தும் ஆரியக்கோழைகளா தமிழரைப் பழிப்பது?

**வீரர்கள் :** (நகைத்து) வெட்கம்! வெட்கம்!

**செங்குட் :** அவர்களில்லாதபோது நாம் வெற்றியடைந்து விட்டதாகக் கூறும் வீரர்கள் படைதிரட்டிக் கொண்டு ஏன் வஞ்சிக்கு வரவில்லை? தமிழ்நாட்டைத் தாக்கவில்லை? தாக்கி வெற்றியடையவில்லை?

**வீரர்கள்:** கோழையர்! பேடியர்!

**செங்குட்:** நம்மை இருநாவாற் பழித்த அந்த வீரர்களின் வீரத்தைப் பலகோடி நாக்களும் பழித்துக் கழித்துக் காலால் மிதிக்கச் செய்யவேண்டும், அவ்வீரர்களின் வாய்ப் பேச்சும் பிழிந்து கோதாக்கப்படுதல் வேண்டும்.

**வீரர்கள:** ஆம்! ஆம்!

**செங்குட்:** இமயத்திறைவன் கண்ணகிக் கடவுள் வடிவம் எழுத ஒரு கல் கொடானுனல், வலிந்துபெற்று, அவன் முதுகிலே வில் கயல் புலிகளையெழுதிய கொடியை எழுதுவோம்.

**வீரர்கள:** தமிழ்க்கொடி ஓங்குக! வில்லும் கயலும் புலியும் வெல்க!

**செங்குட்:** நாளைக்கு நம் குடையையும் வாளையும் வடதிசை நோக்கிச் செலுத்துவோம். தமிழன்னையார் வீர மாலையிலே மலர்ந்த நீங்கள் யாவரும் வடநாட்டின்மேற் போர்க்கெழுவீர்களென்று நம்புகிறேம்.

**வீரர்கள்:** (வாளை தூககி) அரசர் வாழ்க! வீரம் வாழ்க! தமிழ்நாடு வெலக! தமிழ் வெல்க!

**செங்குட்:** (மகிழ்ச்சியுடன) உங்கள் அன்புக்கு மகிழ்கின்றேம். நாளைமுதற் போருக்கு வரும் வீரர்களின் குடும்பங்கள் அரண்மனைக் கருவூலத்திலிருந்து பொருள் பெற்றுவாழும். பல வீரர்களின் வீர அணுக்களின் திரட்சியே வீரமாதின் அழகிய உருவம். ஆகவே, வெற்றியிலே எல்லோருக்கும் பங்கு உண்டு. நாளைக் காலையிலே வாள் வழிபாட்டுடன் வாள் நாட்கோளும் குடைநாட்கோளும் நடைபெறும். யாவரும் வருக!

வீரர்கள் : நன்று ! நன்று !

செங்குட : நன்று ! சென்று வருக !

வீரர்கள (எழுந்து) சேர பெருமான் வாழ்க ! சேரநாடு வாழ்க ! தமிழ் வாழ்க ! வீரர்கள் வாழ்க !

[எல்லோரும் தலைவணங்கி வாளேந்தி நிற்கிறார்கள சேரன் செங்குட்டுவனும் வேண்மாளும் நடுவிலும் வில்லவன் கோதை முன்னும் அழும்பில் வேளும் இளங்கோவடிகளும் பின்னும் செல்கிறார்கள. அவர்கள வெளியேறிய பிறகு வீரர்கள செல்கிறார்கள்.]

---

## காட்சி 10

இடம். வஞ்சியில் அரண்மனையைச் சார்ந்த வீரவழிபாட்டு மண்டபம்.

காலம் காலை

[ஒரு மேடையின்மேல் மாலையணிந்த வெண் கொற்றக் குடையின்கீழ் பொன்னாலான பலகையில் ஒரு வாள் நடப்பட்டிருக்கிறது அதன் அருகிலே ஒரு குடத்தில் நறுமணப்பொடி கலந்த நன்னீரும் மணமலர் மாலையும் உள்ளன இளங்கோவடிகள் அருகில் நிற்கிறார் மேடையின் அருகில் அடுத்த படியிற் சேரன்செங்குட்டுவனும் வில்லவன்கோதையும் இருமருங்கும் நிற்கிறார்கள். அடுத்த படியில் வேண்மாளும் பல பெண்களும் நிற்கிறார்கள் வாளுடன் ஆயிரக்கணக்கான வீரர்கள அணியணியாக நிறுத்தப் பெற்றிருக்கிறார்கள் வீரப்பாட்டுடன் வழிபாடு நடைபெறுகிறது. எல்லோரும் பாடுகிறார்கள் ]

## பாட்டு

வீரவாள் வெல்கவே! வெற்றிவாள் வெல்கவே! (வீரவாள்)

[இளங்கோவடிகள் குடத்திலிருந்த நீரை யெடுத்து வாளமேற்கொஞ்சம் கொஞ்சமாக விட்டுக்கொண்டு பாடுகிறார்.]

வீரவாளழன்று வெம்மை வீசியேனற போரிலே,
சேரநாடா வென்றி கொண்டு சீர்பொலிந்து வருகவே
(வீரவாள்)

[வீரர்கள் பாடுகிறார்கள்]

வீரவாள் வெல்கவே! வெற்றிவாள் வெல்கவே!

[இளங்கோ மாலையணிகிறார்]

வென்றி வேண்டி மாதரார் விளக்க வாழ்த்துக் கூறவே
என்று மொன்றிடாத வீணர் சென்றுசென்று தேயவே
(வீரவாள்)

[கையிலிருந்த மலர்களை வாள்மேலெறிந்து]

வீரவாள் வெல்கவே! வெற்றிவாள் வெல்கவே! (வீரவாள்)

[இளங்கோ கைகுவித்து]

அமிழ்து பெற்ற மொழி தழைத்த
தமிழ் தழைக்க உலகெலாம்!
தமிழ் தழைக்க தமிழ் தழைக்க
தமிழ் தழைக்க என்றுமே!

[வீரர்கள் வாளை நிமிர்த்தி]

வீரவாள் வெல்கவே! வெற்றிவாள் வெல்கவே!

[இளங்கோ நறுமணப் புகையூட்டி]

பகைவர் மார்பு குருதி பொங்க முழுகி யெஞ்சிடாமலே
முகை மலர்ந்த மாலை போலக் குடர் புனைந்து வருகவே!

[எல்லோரும்]

வீரவாள் வெல்கவே! வெற்றிவாள் வெல்கவே!

**செங்குட்டுவன்.** (வாளைவணங்கி) என்முன்னோர் நாளி லிருந்து வழி வழியாக வெற்றியளித்த ஒளிமிகுந்த வாளே! வட நாடு செல்லும் எனக்குப் பகைவரை வென்று வெற்றியைத் தருவாயாக! உன்னை வழி பட்டுச் செல்லும் நான் வெற்றி மாலையணிந்து வருவேனாக! இன்றேல் அங்கேயே வீரருலகு செல் வேனாக! வெற்றியையன்றி யறியாத வீரர்களின் வாழ்வுக்கு என்னால் எவ்வகைக் குற்றமும் ஏற் படாமல் வெற்றியைத் தருவாயாக! (வீரர்களை நோக்கி) வீர நண்பர்களே! நீங்கள் விரும்புவது என்ன?

**வீரர்கள் எல்லோரும்:** (ஒரே மொழியாக) வெற்றி பெறு வோம், அல்லது உயிர் விடுவோம். வட நாட்டா ரடி பணிந்து மானும் உடல்கொண்டு மீளும் நிலையை யேலோம்.

**செங்குட்** (கண்ணீர்ததும்ப) நன்று! மாதர்களே! நீங்கள் விரும்புவது என்ன?

**மாதர்கள்:** (ஒரே குரலாக) எங்கள் கணவர்களின் வீரச் செயல்! அவர்களுடைய போர்ப் புண்கள் மலர்ந்த வீரத்தோள்! அவர்களுடைய பகைவர்களைக் கண்டு அஞ்சாமல் முன்னேறும் நடை! அஞ்சோம் என் னும் அவர்களுடைய மொழி!

**செங்குட்:** (வியந்து) நன்று! நன்று!

[படைத்தலைவன் கையிலே அந்த வாளைச் செங் குட்டுவன் எடுதது அளிக்கிறான், அவன் வீரவணக் கஞ் செய்து ஏந்துகிறான.]

**இளங்கோ.** (குடையை நோககிக் கைகுவித்து) வெண் கொற்றக் குடையே! இமயமலையே காம்பாகவும்

வானமே உன் விரிப்பாகவுங் கொண்டு உலகை யெலாம் எங்களரசர் செங்குட்டுவர் உன் நிழலிலே இருத்தி ஆளும்படி பரவுவாயாக? உனக்குப் போட்டியாக எக்குடையும் இலாது கழிவதாக!

[செங்குட்டுவன அக்குடையை அழும்பில வேளிடம் எடுத்தளிககிறன. இரணடும ஒரு யானை யின் மேல ஏற்றபபடுகின்றன. இரண்டு வீரர்கள் அவற்றை யேநதி அமாகிறாகள போர்முரசு முழங குகிறது ]

எல்லோரும்: சேரர் பெருமான் வாழ்க!

[யானையும், யானையினபின ஆயிரம வீராகளும செலகிறார்கள, எலலோரும வழிபட்டுத திருமபு கிறாகள.]

---

## காட்சி 11

இடம் வஞ்சிமாநகரில சிவபெருமான கோயில
காலம்: காலை

[சிவபெருமான கோயில் மிக அழகாகப புனைவு செய்யப் பெற்று உளளது. திருமுன்னே இருமருங கினும நகரப் பெருமக்கள் கைகுவித்த வண்ணம் நிறகின்றனர். சேரன்செஙகுட்டுவன், அழுமபில் வேளும் வில்லவன்கோதையும பின் தொடரக் கைகுவித்த வண்ணம் வருகிறான் யாவரும், 'சேரர் பெருமான் வாழ்க!' என ஆரவாரிக்கின்றனா. செங்குட்டுவனும் பிறரும் தத்தம் நிலையிற் போய் நிற்கின்றனா வழிபடும அந்தணா மலரிட்டு நறு மணப்புகை காட்டி இறைவனை வழிபடுகிறார். மலர் மாலையும, படைத்த பொருள்களுமாக அந்தணர் அரச

னிடம அளிககிறூர் அரசன் அவற்றைத் தொட்டு வணங்கித திருநீறணிநதுகொண்டு, மலர்மாலையை முடியில் அணிகிறுன். விளக்கிலிருந்து ஒளிபபொறி பிதிாகிறது. யாவருமம, 'சேராபெருமான் வாழ்க! வெற்றி பெறுக!' என மகிழ்சசியுடன் ஆரவாரிககின்றனர். அரசன் களிப்புடன் இறைவனை முடிதாழ்த்தி வணங்குகிறுன்

பின்னர், அரசன் வெளிவநது சுற்றுககோயிலை வலமவந்து கோயிலின் வெளியே வருகிறுன் போர் முரசு முழங்குகிறது. அரசன் பட்டததுக களிற்றின் மேல ஏறுகிறுன் வில்லவன்கோதை ஒரு புரவிமீது ஏறுகிறுன் நகரப பெருமக்கள ஆரவாரத்துடன் பின்தொடரச சிறிது தொலைவு சென்றதும் திருமால் கோயிலிலிருநது மலாமாலையும படைபபுப பொருள் களும் வருகினறனா. அவற்றை அரசன் வணங்கி ஏற்று மலாமாலையைக கழுததிலணிகிறுன். பின்னர், நகாவலம நடக்கிறது. இளங்கோவடிகளும் அழும்பில்வேளும் அவவலததிலே கலநதுகொளகின்றனர்.

மருகின் இருமருங்கும் அழகாகப புனையப்பெற்றுள்ளன. மாடஙகளின்மீதும வாயிலிலும ஆடவரும பெண்டிரும அணியணியாக நின்று அரசனை வாழ்ததி மலாகளை வாரி அரசன்மீதும படைத்தலைவன்மீதும் பெய்கின்றனர். நகர்வலம முடிகிறது. மதிலைக் கடந்து நகரின் வெளியே வந்ததும் யாவரும் நிற்கின்றனர். அழும்பில்வேளிடமும இளங்கோவடிகளிடமும் அரசன் விடைபெறுகிறுன். போர்முரசு முழங்கப் படைததலைவனுடன் போர்முகம நோக்கிச செல்கிறுன் ]

## காட்சி 12

இடம் : நீலகிரி மலைச்சாரலிற் பாசறை.

காலம் : மாலை.

[ஒரு மருங்கிற் களிறுகள் அணியணியாகக் கட்டப்பட்டுள்ளன. மற்றொரு மருங்கிலே பரிகள் பந்திப் பந்தியாகப் பிணைக்கப் பெற்றுள்ளன. ஓரிடத்திலே பல சமையற்காரர்கள் வேடிக்கையாக உரையாடியவாறு சமையல்வேலை செய்கின்றனர். உண்டிகளின் நறுமணம் எங்கும் பரவியுள்ளது. அங்கங்கே அமைக்கப்பெற்ற கூடாரங்களின் எதிரிலே வீரர்கள் பாடிக்கொண்டும் இனிமையாக உரையாடிக்கொண்டுமிருக்கின்றனர். சேரன் செங்குட்டுவன் தன் பாசறையின் எதிரிலே கட்டிலில் அமர்ந்திருக்கிறான். பெண்கள் கவரி வீசுகின்றனர். எதிரில் ஒரு கட்டிலில் வில்லவன்கோதை வீற்றிருக்கிறான். சூழ வீரர்கள் வாளேந்தி நிற்கின்றனர். ஒரு வீரன் வருகிறான்.]

**வீரன் :** (வணங்கி) பாசறைக்கு வெளியே சில துறவிகள் காத்திருக்கின்றனர். அரசர்பெருமானைக் காண வேண்டுமாம்.

**செங்குட் :** நன்று. அழைத்து வருக !

[வீரன் வணங்கிச் செல்கிறான்.]

வீரர்களுக்கெல்லாம் உணவுக் குறையின்றிச் சமைக்கத்தக்க வகை செய்தீரா ?

**வில்லவன் :** (வணக்கத்துடன்) ஒரு குறையுமின்றி வகை செய்துள்ளேன். இன்னும் இரு நாழிகைக்குள் உண்ணத் தொடங்கலாம்.

[துறவிகளைக் காவலன் அழைத்து வருகிறான்.]

**செங்குட் :** (எழுந்து வணங்கி) வருக ! (அவர்களுக் கேற்ற இருக்கை யளிக்கிறான்) தாங்கள் எங்கிருந்து வருகிறீர்கள் ? என்னாலாகவேண்டுவது ஏதேனும் உண்டோ ?

**ஒரு துறவி :** நாங்கள் இமயத்துத் துறவிகள். கன்னியா குமரியை நாடிச்செல்கிறோம். வழியிலே தாங்கள் வடநாட்டின்மேற் படையெடுத்துச் செல்வதை யறிந்து காணவந்தோம். இமயத்திலிருக்கும் துறவி களுக்கு ஏதும் இடையூறுகளைத் தங்கள் படை வீரர்கள் செய்யாமல் முன்கூட்டியே அவர்களுக்குத் தெரிவித்தல் வேண்டும்.

**செங்குட் :** அவ்வாறு அஞ்ச வேண்டியதேயில்லை. வீரர் களின் கடமை தங்களை எதிர்த்தவரோடு போர் புரிவதே, தவம் புரியும் முனிவரைத் துன்புறுத்த லன்று. தங்கள் அச்சத்திற்குக் காரணமே இல்லை.

**துறவி :** பொதுவாக வடநாட்டு வீரர்கள் பிறநாட்டின் மேற் சென்றால் அங்குள்ளவர்களைத் துன்புறுத்து கின்றனர், அதனால அஞ்சும் இயற்கையேயன்றி வேறன்று தாங்கள் கூறுவதை நோக்கின் எங்கள் அச்சம் நாணமுறத் தக்கதாகவுள்ளது. தமிழரின் வீரப்பண்பை இப்பொழுதுதான் அறிந்தோம். சென்றுவருகிறோம். ஒழுங்கான வீரர்கள் பெறு வது வெற்றியே. இறைவனருள் பெருகுக !

[அரசன் எழுந்து வணங்கத் துறவிகள் வாழ்த்தி விட்டுச் செல்கின்றனர். இதுவரையில தொலைவி லிருந்த மற்றொரு வீரன வருகிறான் ]

**செங்குட் :** என்ன வேண்டும் ?

**வீரன் :** (வணங்கி) குடகக் கூத்தர்கள் விறலிகளுடன் கூட்டம் போட்டுள்ளனர்.

**செங்குட் :** *அழைத்து வருக! (வீரன் வணங்கிச் செல்கிறான்) படைத்தலைவரே! மழை வருமோ?*

**வில்லவன் :** *மேகங்களின் நிலை மழையைக் காட்டவில்லை. எனினும் கார்காலமன்றோ? ஒழுங்கில்லாதவருடைய உள்ளம்போல நிலையற்ற காலம்.*

**செங்குட் :** *குடகக்கூத்தை இதற்குமுன் கண்டிருக்கின்றீரோ?*

**வில்லவன் :** *கண்டிருக்கின்றேன் தமிழ்நாட்டுக் கூத்தைப்போலவே இருக்கும்.*

*[கூத்தர்கள் விறலிகளுடன் வருகிறார்கள்.]*

**செங்குட் :** *நீங்கள் யார்?*

**கூத்தர் தலைவன் :** (வணங்கி) *நாங்கள் குடகக் கூத்தர்கள். சேரர்பெருமானுக்கு இந்நாட்டுக் கூத்தைக் காண்பிக்க நெடுநாளாக விரும்பியிருந்தோம். அஃது இப்போது நிறைவேறியது.*

**செங்குட் :** *நல்ல பயிற்சியுடையவர்களோ?*

**கூத்தர் தலைவன் :** *ஆணையிட்டாற் காண்பிக்கிறோம்.*

**செங்குட் :** *நன்று, ஆகட்டும்.*

*[விறலிகள் ஆடுகின்றனர். போருக்குச் சென்ற தலைவர் வரவைக் கார்காலத்திலே நோக்கியிருக்குந் தலைவி நிலையும், அவளைத் தோழிகள் தேற்றிக் 'கார் காலம் வந்தும் வரவில்லையேயெனக் கலங்காதே! அதோ தேர் வரும் ஒலி கேட்கிறது!' எனக் கூறும் நிலையும் மெய்ப்பாட்டிலும் கண்பார்வையிலுங் கைக்*

குறிப்பினுந் தோன்ற அவர்கள் ஆடுவதைக் கண்ட செங்குட்டுவன் வியப்படைகிறான். அவனுக்கு அவன் காதலி வேண்மாளின் நினைவும் உண்டாய் விடுகிறது.]

**செங்குட்** (மகிழ்ச்சியுடன்) மிகச் சிறந்த கூத்து! பாட்டில்லாமலே—பேச்சில்லாமலே—மெய்க்குறிப்பிலே யாவும் விளங்க ஆடிய விறலிகளை மிகவும் மெச்சுகிறேன். அவர்களுக்கு இதோ இந்தப் பச்சை மாலையைப் பரிசாக அளிக்கிறேன். (செங்குட்டுவன் ஒரு பச்சை மாலையை அளிக்கிறான், கூத்தா தலைவன் வணங்கிப் பெற்றுக்கொள்கிறான்) நன்று! நீங்கள் செல்லலாம். (வணங்கிச் செல்கின்றனர்) படைத் தலைவரே! இத்தனை சிறந்த கூத்தைக் கண்டவுடன் என் உள்ளம் நெகிழ்ந்துவிட்டது. இயற்கையாகவே ஒரு தலைவி படுந்துன்பம் அப்படியே கண்முன் தோன்றச் செய்துவிட்டாள் அவ் விறலி.

**வில்லவன்:** ஆம்! ஒரு சிறந்த கவிஞனுடைய காவியம் போல இருந்தது அக் கூத்து.

[வீரன் ஒருவன் வருகிறான்.]

**செங்குட்.** யார் வந்துள்ளனர்?

**வீரன்:** (வணங்கி) நூற்றுவர் கன்னரிடமிருந்து காணிக்கைப் பொருள்களுடன் சஞ்சயர் வந்திருக்கின்றனர்.

**செங்குட்** நன்று! அழைத்து வருக! (வீரன் செல்கிறான்) ஆரிய நண்பர்கள் என்ன கூறியனுப்பியுள்ளனரோ?

**வில்லவன்:** நமக்குத் துணை புரிவதாகவே கூறியிருப்பார்கள்.

[சஞ்சயன் வருகிறான்.]

**செங்குட்.** வருக! அங்கு அமர்க! உங்கள் அரசர் நூற்றுவரும் நலந்தானே.

**சஞ்சயன் :** (வணங்கி அமர்ந்து) சேரர் பெருமான் வாழ்க! இறைவன் அருளால் யாவரும் நலமே. தாங்கள் வடநாடு வருவது தெரிந்து சில காணிக்கைகளுடன் என்னை அனுப்பினர். காணிக்கைகளை இங்கே கொண்டு வரலாமோ?

**செங்குட் :** (புன்முறுவலுடன்) என்ன பொருள்களோ!

**சஞ்சயன் :** நாடகப் பெண்கள் ஐம்பதிருவர், இசைக் கருவியாளர் இருநூற்றெண்மர், வேழம்பர் நூற்றுவர், தேர்கள் நூறு, யானைகள் ஐந்நூறு, எம் நாட்டுப் பொருள்கள் நிறைந்த வண்டிகள் இருபதினாயிரம், பணியாட்கள் ஆயிரவர்.

**செங்குட்** நன்று நம் படைத்தலைவர் அவற்றை ஒழுங்கு செய்வார்.

**வில்லவன் :** (வணக்கத்துடன்) அப்படியே செய்கிறேன்.

[எழுந்து செல்ல முயல்கிறான்.]

**செங்குட் :** சற்று அமரும், செல்லலாம்

**வில்லவன் :** நன்று. [அமர்கிறான்.]

**சஞ்சயன் :** தாங்கள் வடநாடு நோக்கி வருவது கண்ணகிக் கடவுளுக்கு இமயத்திலே ஒரு கல் கொண்டுவர வேண்டுமென்றால், எம் தலைவர்களே இமயத்திற் கல்லெடுத்துக் கங்கையிலே நீராட்டித் தருவதாகக் கூறினார்கள்.

**செங்குட் :** (புன்முறுவலுடன்) கன்னர்கள் அவ்வாறு செய்வார்களென நம்புகிறோம். யாம் அதற்காக மட்டும் இப்போது வரவில்லை. உத்தர தேசத்தரசர்களான கனக விசயர்கள் தமிழர்களின் வலிமையைக் காண வேண்டுமென்றார்களாம். அவர்களுக்கு

எம் ஆற்றலை அளக்கும் வாய்ப்புத்தரவே வருகிறோம். கங்கையைக் கடக்கப் படகனுப்புவதே நூற்றுவர்களின் துணைச்செயலாகும். (வில்லவன் கோதையை நோக்கி) இன்றிரவு இங்கே தங்கிக் காலையிற்செல்க! இவருக்கும் இவரைச் சார்ந்தவர்கட்கும் வேண்டும் நலன்களைச்செய்து தருக! அந்தக் காணிக்கைப் பொருள்களையும் ஒழுங்குசெய்து நம் பொருள்களுடன் சேர்த்துக் கொள்க! சஞ்சயர்க்கு நிறையப் பொருள்கள் தருக!

**வில்லவன் :** (வணங்கி) அங்ஙனமே செய்கிறேன்.

[சஞ்சயனுடன் செல்கிறான்.]

---

## காட்சி 13

இடம் ஆரிய நாட்டிலே உத்தர தேசத்திலே கனகவிசயர் அரண்மனை

காலம் : பிற்பகல்

[அவைக்களத்தில் அரியணையிலே கனகன் வீற்றிருக்கிறான் விசயன் அவனருகில் அமர்ந்திருக்கிறான். உத்தரன், விசித்திரன், சித்திரன், தனுத்தரன், பைரவன், முதலான அரசர்களும் தமக்கேற்ற இருக்கைகளிலே இருக்கின்றனர்.]

**கனகன் :** (எழுந்து) ஆரிய வீரர்களே! இந்த ஆரிய நாட்டிலே தோன்ற நாமெல்லோரும் எவ்வளவோ புண்ணியம் இயற்றியிருத்தல் வேண்டும். நம் நாட்டை நோக்கத் தென்னாடு மிகவும் தாழ்வுற்றது;

வளமில்லாதது! புண்ணிய நதிகளான கங்கை, யமுனை, சிந்து, பிரமபுத்திரா, கோதாவரி, கிருஷ்ணா, யமுனைகளோடு ஒப்பிடத் தக்கதான சிறந்த நதி ஒன்றுவது உண்டோ? மேலும் இந்த நதிகளின் நீரைப்பருகிய நம்மை—நம்மையென்ன, ஒரு சிறு புழுவையாவது—அந்தத் தமிழர்கள் நிமிர்ந்து பார்க்கமுடியுமோ? பரத கண்டமெனக் காவியங்கள் கைகுவித்துப் போற்றும் இந்த நாட்டை—ஸ்ரீராமனும் கிருஷ்ணனும் தோன்றிய நாட்டை—ஒரு தமிழன் பரிகசிப்பதா?

**அவையோர்** கூடாது, கூடாது!

**விசயன்** (எழுந்து) நாங்களில்லாதபோது வந்த அந்த மலைநாட்டான் இப்போதும் வருவதாகச் சாரணர்கள் கூறினார்கள். அவன் தற்பெருமையடித்துக் கொண்டு உளறியதைக் கேட்டால் (பல்லைக் கடிக்கிறான்) இரத்தம் கொதிக்கிறது!

**அவையோர்:** என்ன? என்ன சொன்னான்?

**விசயன்:** முன் பொறித்தது போலவே இப்போதும் இமயத்திலே ஒரு சிலை கொள்ளப்போகிறானும்! அந்தச் சிலையை எங்கள் தலையின்மேற் சுமத்திக் கொண்டு போவானும்! என்ன ஆணவம்?

**அவையோர்:** அவமானம்! அவமானம்!!

**கனகன்:** தட்டிப்பேச ஆளில்லாவிட்டாற் சண்டப்ரசண்டன்தான் தம்பி! ஸ்ரீராமபிரானையும் விசயனையும் போன்ற தீரர்கள்-பீமனைப் போன்ற பலசாலிகள்-உள்ள இந்த நாட்டிலே இப்போது வீற்றிருக்கும் எண்ணற்ற அரசர்கள் நிறைந்த நாட்டிலே—ஒற்

றைத் திராவிடன்—தமிழ் மன்னன் வந்து வெற்றி பெறுவதா?

**அவையோர் :** ஒருபோதும் முடியாது !

**தனுத்தரன் :** பாரத விசயனைப் போன்ற நம் அரசர் விசயன் இருக்கும்போது பயமென்ன? இரணி யனைப் போன்ற கனக மன்னரிருக்கும்போது ஏக்க மென்ன? என் கையிலே உள்ள வில்லுக்கேனும் அவர்கள் ஈடுகொடுப்பார்களா?

[சாரணன் ஒருவன் வருகிறான்.]

**கனகன் :** வா, என்ன செய்தி?

**சாரணன்** (வணங்கி) ஜெயவிஜயீபவா ! சேர மன்னர் கங்கையைக் கடந்து நம் தேசத்து அருகிலே வந்து விட்டார்கள் !

**கனகன் :** அதற்குள்ளாகவா விளக்கைத் தேடிவருகிறது விட்டிற்பூச்சி? ஈ தன்னைத்தேடி நிற்கும் பல்லிக் கருகில் வருகிறது.

**விசயன் :** கொசுவைக் நசுக்குவதுபோல நசுக்கிவிடுவோம்.

**அவையோர் :** ஆம் ! ஆம் !

**கனகன் :** அவன் எங்ஙனம் கங்கையைக் கடந்தான்?

**சாரணன் :** அதைத்தான் கூறவந்தேன். நூற்றுவர் கன்னர்கள் கங்கையைக் கடக்கப் படகு உதவினர் களாம், மேலும்........

**கனகன் :** (சீற்றத்துடன் மெய்துடிக்க) மேலும் என்ன? அந்தக் குடிகேடர்கள்—நம்மோடு சேர்ந்து அவனை எதிர்க்கக் கடமைப்பட்டவர்கள். அவனுக்குதவியா செய்வது? மிக நன்று !

[கோபத்தோடு நகைக்கிறான்.]

**சாரணன்:** அவர்களே—நூற்றுவர் கன்னர்களே இமயத்திலே கல்லெடுத்துக் கங்கையிலே திருமஞ்சனமாட்டித் தருவதாகத் தெரிவித்தார்களாம். ஆனால், அந்த அரசன் நம்முடன் போர்செய்து தமிழ்நாட்டின் பலத்தைக் காட்டத்தானே வருவதாகக் கூறினானும். ஆகவே, கங்கையைக் கடக்கப் படகுமட்டும் உதவினார்களாம். இப்போது உத்தரதேசத்துக் கருகில் வந்துவிட்டனர்

**விசயன்:** குலத்தைக்கெடுக்குங் கோடரிக் காம்புகள். அவர்களை அவனுடன் சேர்த்துத் திராவிட தேசத்துக்கே ஓட்டவேண்டும். உளவனில்லாமல் ஊர் பாழாகாது.

**சித்திரன்:** முன் வந்தபோது அவனுடன் போர்செய்து தோற்றனர், நண்பர்களாயும் ஆகிவிட்டனர்.

**விரயன்:** என்றால், இப்போது குடிகெடுக்க முன்வருவதோ? எதிரிக்கிடங்கொடுக்கும் ஈனர்கள்!

**கனகன்:** சாரணரே! எதிரியின் படைப்பலம் எப்படி?

**சாரணன்:** வில்லவன் கோதையே தளகர்த்தன். அவன் நிகரற்ற பேராற்றலுடையவன்! அஞ்சாநெஞ்சன்! அவன்கீழ்ப் பல பெருவீரர்கள் பகுதிகளின் தலைவர்களாயிருக்கின்றனர். குதிரைப்படைகளும் யானைப்படைகளும் காலாட்படைகளும் அளவு கடந்துள்ளன. இதுவரையிலே தோல்வியே அறியாத வெற்றிவீரன் வில்லவன்கோதை. சேரன் செங்குட்டுவனே ஊழிக்காற்றுப் போன்றவன்.

**விசயன்:** (சீற்றத்துடன் நகைத்து) நல்லது! அவனுடைய திறத்தை அமிதமாகவே அளந்து கொட்டுகிறாய்!

அப்படியானால் இங்குள்ளவர்கள் பேடிகளென்று நினைத்தாயா ?

**சாரணன்** (பயந்து) பொறுக்கவேண்டும் எதிரிகளின் பலத்தைக் கேட்டதால் உள்ளதைக் கூறினேன். நம் பலத்தை அறியாமற் கூறவில்லை. நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டுமென்றே செப்பினேன்.

**கனகன் :** அஞ்சாதே ! விசயன் சினத்தினாலே அப்படிக் கூறுகிறான். (அங்குள்ளவரை நோக்கி) எதிரியின் பலத்தைக் கேட்டீர்கள். நீங்கள் என்ன கூறுகிறீர்கள் ?

**உத்தரன் :** தமிழன் எவ்வளவு வலிபெற்றிருப்பினும் என்ன ? இடமாற்றம் நமக்கே துணைசெய்யும். மதயானையை நீரிலேயிழுத்த முதலே, கரையிலே பூனையையும் பிடிக்கமுடியாமல் விழிக்கும்.

**கனகன்** நன்று கூறினீர் ! மேலும் நாம் பலர் ! அவன் ஒருவன் ! எப்படியும் இம்முறை திராவிடனைத்—தீரா விடனை—ஒழிப்போம். சாரணரே ! நீர் போய் மேலும் செய்திகளையறிந்து வாரும்.

**சாரணன் :** (வணங்கி) தங்கள் சித்தம் [செல்கிறான்.]

**கனகன் :** எல்லோரும் உறுதிசெய்து கொள்வோம். ஆரியநாட்டின் மானத்தைக் காப்பது நம் கடன். ஆரிய அன்னையைத் தமிழன் மாசுபடுத்த விடலாகாது. நம்முடைய உடம்பில் ஒருதுளி இரத்தம் இருக்கும்வரை போராடிக் காப்போம். ஆரிய அரணிலே தமிழ்நாட்டு எலி நுழைய விடுவீர்களா ?

**எல்லோரும் :** விடோம் ! விடோம் !!

**கனகன் :** நம்முடைய ஒவ்வொரு மூச்சிலும் பேச்சிலும் வீரம் செறிந்து விளங்கவேண்டும். வென்றால் புகழ் பெறுவோம்; இறந்தாலும் புகழ்பெறுவோம் ஆனால், தோற்றாலோ நம் பெயருள்ளளவும் இழிவு தான். 'மானமிழந்தும் வாழ்வது மக்களியல்பன்று!' என்று அந்தத் தமிழ்நாட்டுப் புலவனே கூறு கிறான்.

**எல்லோரும் :** ஆம்! ஆம்!!

**கனகன் :** ஆரிய நாட்டிலுள்ள ஒவ்வோர் ஆணும் போரிற் புகவேண்டும். இன்றே சென்று படையைத் திரட்டுங்கள்.

**எல்லோரும் :** ஆணைப்படியே செய்வோம்! ஆரிய அன்னை வாழ்க! கனகவிசயர் வாழ்க! தமிழ மன்னர்கள் வீழ்க!

---

## காட்சி 14

இடம் : கனகனின் அரண்மனை.

காலம் : இரவு.

[ஆரியாங்கனை கவலையுடன் ஒரு கட்டிலில் அமர்ந்திருக்கிறாள். அவள் கண்களில் நீர் ததும்பி நிற்கிறது ]

**ஆரியாங்கனை :** (தனியே) 'என்ன கொடுமை! துர்க்கா தேவி! ஏன் இப்படி வருத்துகின்றாய்! ஆரியநாடு அழிவதா? கனவின் பலனென்னைக் கலக்குகிறதே! காதலில் ஊறிய தெய்வம் ஒருபக்கம்! தமயன்

மார் ஒருபக்கம்! மதிநிகர் முகமும், தடவரைத் தோளும் அன்றோ என் உயிரை உண்டவை! அவருடைய—அந்தத் தமிழ் ஏற்றின்—கனிந்த பார்வையே! ஆண்டுகள் பலவாகியும் அந்த இனிய முகம் என் உள்ளத்திலே குடிகொண்டுள்ளதே! எங்ஙனம் மறப்பேன்? என் உள்ளத்திலே கலந்து உயிரிலே கலந்து—உயிரே ஆகிய அந்தப் பேரழகனின் உருவம் எவ்வாறு என்னைவிட்டு அகலும்! துர்க்காதேவியே! நீயும் ஒரு பெண்ணே! எங்ஙனமாவது என் எண்ணம் நிறைவேற அருள்செய்!.... என் தமயனை எப்படியாவது போரை நிறுத்த வேண்டிக்கொள்வேன். என் காதலை—இல்லை—காதலை அறிவிக்கமாட்டேன்! (கனகன் வருகிறான்) அதோ அண்ணா வந்துவிட்டான்! (கண்களைத் துடைத்துக்கொண்டு) வா அண்ணா!

[எழுந்திருக்கிறாள், அவன் அமர்கிறான்]

**கனகன்:** என்ன? ஏன் இப்படிக் கலங்கியிருக்கிறாய்?

**ஆரியமாலா:** தமிழ் மன்னரோடு யுத்தஞ் செய்யப்போவதாகக் கேள்வியுற்றேன்!

**கனகன்:** ஆம். அதைப்பற்றி உனக்கென்ன?

**ஆரியமாலா:** ஏன்? எனக்கொன்றுமில்லையா? நாட்டின் நலத்தை நான் நினைப்பது தவறா!

**கனகன்:** (புன்முறுவலுடன்) நல்லது! போர்புரிய வேண்டியதுதானே? புனித ஆரிய நாட்டிலே கண்டவனெல்லாம் அடிவைப்பதும், கொள்ளையடிப்பதும் ஆரிய வீரத்தை இழிவு செய்யுமல்லவோ! அதற்காகப் போர்புரிவதே நம் கடமை.

**ஆரியாங்:** உங்கள் கடமையை உணர்கிறேன். அதனு டன் நான்கண்ட கனவின் பலனையும் உணர்கிறேன்.

**கனகன்:** என்ன கனவு?

**ஆரியாங்:** அதைக் கூறுவது நன்றாயிராது. கனவு நல்லதாயில்லை யென்றுமட்டும் கூறுவேன். ஆகை யால்,........

**கனகன்:** ஆகையாற் போர்புரிய வேண்டாம் என்கி ருயா? என்னுடன் பிறந்தவளா இப்படிக் கலங்கு கிருள்? (நகைககிருன்) நீ என்ன செய்வாய்? பெண் களுக்குப் போரென்ருல்—சொன்னுலே போதுமே —நடுக்கந்தான்! என்ன அம்மா! எட்டுத் திக்கி லும் சென்று வென்று இப் பாரதநாடு முழுமையும் ஆரியர்களே ஆண்டார்களென்று வரலாறு கூறு கிறதை அறியாயா? இப்போதுமட்டும் அந்தச் சேரன் நம் கோட்டையைத் துளைக்கவிடலாமா? நம்மால் நம் இனத்திற்கே இழிவு வரலாமா?

**ஆரியாங்:** (மெதுவாகத தலைகுனிநதவாறே) வரலாற் றிலே அவ்வாறு எந்த ஆரியனும் தமிழ்நாட்டை வென்றதாகக் காணப்படவில்லையே!

**கனகன்:** (வெட்கத்துடன்) இருக்கலாம்! அந்தச் சிறிய வறிய தேசத்தை யார் தேடிச்சென்று கொள்ளப் போகிருர்கள்? மேலும் அந்தப் பெரிய வீரர்க ளோடு யுத்தம் புரிய யார்தான் விரும்புவார்கள்?

[ஏளனமாக நகைக்கிருன்.]

**ஆரியாங:** (புன்முறுவலுடன்) இப்போதுமட்டும் என்ன வந்துவிட்டது? மேலும், சென்ற தடவையில் இவரை யாரும் வெல்லாமல் விட்டார்களே!

**கனகன்:** சென்ற முறையில் நாங்கள் இல்லாததாலே தான் அவன் வென்று சென்றான். அதனாலே, இப்போதும் வென்று விடுவானென்று நினைத்து பயப்படுவதா? இவன் சிறிது பலமுடையவனே. எனினும், 'உயர உயரப் பறந்தாலும் ஊர்க்குருவி பருந்தாகுமா?' இதைப்பற்றி நீ ஒன்றுங் கவலை படாதே. வீரஞ் செறிந்த பெண்ணாக இருப்பதை விட்டுக் கோழை மாதாகிக் குழப்பாதே.

[செலகிறான.]

**ஆரியமாலா:** (கண்ணீர்வார) ஐயோ! இதற்கென் செய்வேன்? எப்படியும் போர் நடக்கும் போலிருக்கிறதே! காதல் பெரிதா? நாடு பெரிதா? நாடுதான் பெரிதென்றாலும் இவர்கள் வெல்வார்களென்று தோன்றவில்லையே! காதலன்றோ ஒரு காரிகைக்குப் பெரிது?.. ...எப்படியும் என் காதலர் வெல்வார் ..... இது என்ன பைத்தியம்? நான் அவரைக் காதலிக்கிறேன். அவர் என்னைக் காதலிப்பாரோ! என்ன மதியீனம்? என்னை அவர் பார்க்கவேயில்லையே! . ... இவ்வளவு காலமாக இதனை எண்ணிப் பார்க்கவேயில்லையே! எண்ணிப் பார்ப்பதாவது! காதலென்பது தெய்வீகமானதன்றோ? தகாத இடத்திலே காதலைத் தெய்வம் கொண்டு செல்லுமோ? .......என்னவோ, எல்லாங் குழப்பமாயுள்ளதே! துர்க்கா தேவி! நான் உன்னை வழிபடுவது உண்மையானால் என் காதலை வீணாக்காதே, இதைத் தவிர வேறொன்றையும் நான் விரும்பவில்லை! காதலையே காதலிக்கிறேன். ஆரிய மன்னர்கள் வென்றாலும் தோற்றாலும் பெரிதல்ல, என்

காதல் மலர வேண்டும். அந்தோ! இப்படியும் ஒரு பெண் விரும்பலாமா?...... (கண்களைத துடைத துக் கொண்டு) என்ன செய்வேன்? என் காதலை யன்றி வேறேதும் என் உள்ளத்தில் இடம் பெற வில்லையே!

---

## காட்சி 15

இடம்: உததர நாட்டின் அருகிலே பாசறை.
காலம்: இரவு

[செங்குட்டுவன் தன் கூடாரத்தின்முன் வீற் றிருக்கிறான் வில்லவன்கோதையும பல படைததலை வாகளும அவன் எதிரில அமாநதிருககிறாாகள இரு வர் தீப்பந்தம ஏந்தி நிற்கின்றனர் பல வீராகள் காவல் புரிகின்றனா அஙகஙகே கூடாரஙகளும விளக்கொளியும தெரிகினறன வீராகள் கூட்டங கூட்டமாக அமாந்து உரையாடிக் கொண்டிருக்கின் றனா]

**செஙகுட்:** (விலலவன் கோதையையும மற்றைப் படைத தலைவரையும பாாததது) நண்பர்களே! கனகவிசயர்கள் நம்மை எதிர்க்கவே முடிவு செய்தனராம். மேலும், அவர்கள் பல நாட்டரசர்களையும் கூட்டிக்கொண்டு எதிர்ப்பார்கள் போலும்.

**வில்லவன்:** (வணக்கததுடன நகைத்து) "ஒலித்தக்கால் என்னும் உவரி எலிப்பகை—நாகம் உயிர்ப்பக் கெடும்" என்றவாறு கடல்போலத் திரண்டு வரி னும் நம் படையான பாம்பின் மூச்சிலே அந்த எலிக் கூட்டங்கள் ஒழிந்து விடும்

செயகுட் : ஆம். எனினும், இது அவர்களுக்குரிய இடம் என்பதை நினைவில் வைத்துக்கொள்ளுதல் வேண்டும். எதற்கும், முன்னேற்பாடு நலம் பயக்கும். நம்மை நாமே மதித்துப் பிறரை இகழ்வதும் இழிவே. ஆகையால், நீங்கள் படைவீரர்களை ஒழுங்காக அணிசெய்து, சூருவளிபோலத் தாக்குதல் வேண்டும். மேலும், அந்தக் கனக விசயர்கள் எங்கும் ஓடிவிடாமல் வளைத்துச் சிறை செய்தல் வேண்டும். நாம் செய்த வருசினம் வீணுகாமற் காப்பாற்றுதல் முதன்மையான நோக்கம்.

"கூற்றுடன்று மேல்வரினும் கூடி யெதிர்நிற்கும்
ஆற்ற லதுவே படை"

என்றவாறு அவர்களும் உயிருடன் ஒருவன் இருக்கும் வரையினும் போர் செயவதாக உறுதி செய்துள்ளதைச் சிந்தித்தல் வேண்டும். ஒருகால் கனக விசயர்கள் போரிலே இறந்துவிடத் துணிந்தாலும் துணிவார்கள். அதற்கு இடங்கொடாமல் மெல்லப் பிடித்தல் வேண்டும்.

வில்லவன் தங்கள் கருத்துப்படி சிறைசெய்கிறேன்.

செயகுட் வேறொன்றுங் கூறுகிறேன். நம் படைவீரர்கள் அறப்போர் புரிவதிலிருந்து தவறக்கூடாது.

படைத் தலைவர்கள் எல்லோரும (வணக்கத்துடன்) அரசர் பெருமான் ஆணை.

செயகுட் : இதுவரையில் அறப்போரே செய்தார்கள், எனினும், மறந்தும் அல்வழி செல்லலாகாது என்பதற்கே இதனைக் கூறினேம். மற்றும், அருகிலுள்ள நகரங்களுக்கு எவ்வித கெடுதியும் இயற்றலாகாது.

பயிர்களை அழிப்பதும் ஊரைக் கொளுத்துவதும் போரிற் சேராதவர்களுக்கு இடுக்கண் செய்வதும் வீரத்திற் கிழிவாகும். ஆகவே, வீரர்களுக் கறிவுறுத்தித் தவறினவர்களைக் கடுமையாகத் தண்டிப்பீர்களாக !

எல்லோரும் : ஆணைப்படி நடக்கிறோம்.

செங்குட். இனி நீங்கள் சென்று துயிலலாம். வீரர்களுக்கு நாளைய போரில் எப்படி முன்னேறுவதெனவும் எந்த அணி எங்கே நிற்க வேண்டும் எனவும் விளக்கியிருப்பீர்களென்று நினைக்கிறோம்

வில்லவன் : நன்றாக விளக்கிப் பயிற்சியுங் கொடுத்தோம்.

செங்குட் : நன்று, சென்று வருக' (எல்லோரும் செல்கிறார்கள், எழுந்து உலாவியவாறு) நாளைக்குத் தெரியும் கனகவிசயர் கைத்திறம். "யா காவாராயினும் நா காக்க" என்று நம் வள்ளுவர் கூறிய வாய்மை எத்துணை உண்மையானது !. இஃது என்ன ! எப்போதும் பாசறை ! எப்போதும் போர் ! நகரத்திலே ஓராண்டாயினும் இனிதே தங்குவதில்லை. வீரனென்று பேரெடுப்பது எவ்வளவு அருமை ! ....உம் ! (பெருமூச்சு விடுகிறான்) நம் ஒருவனுக்காக எவ்வளவு வீரர் போர் செய்கின்றனர் ! இந்தப் போர்வெறி நம் நாட்டிலே எவ்வளவு வளர்ந்து போய்விட்டது ! தமிழரறம் அம்முறையிலே யுள்ளது ! இந்த நாட்டிலே நீர்வளமும் நிலவளமும் சிறந்துள்ளன ! உயர்ந்த மரங்கள் ! அடர்ந்த காடுகள் ! எனினும், மக்கள் கோழைகள் ! இன்றேல்,

அவர்கள் நாட்டிலே அவர்களை எதிர்க்க வருவோமா? வந்தாலும் வென்றி கொள்வோமா? நன்று! நம் செயலிலே இதுவரையிலே தடையில்லை. இனியும், அவ்வாறே முற்றுற இறைவன்—முக்கட் செல்வன் அருள் புரிவானாக!

---

## காட்சி 16

இடம் உததர தேசததினருகே போாககளம.

காலம் காலை.

[ஒரு பககம விலலவன்கோதையின தலைமையிலே நூற்றுவா கனனரும தமிழ வீராகளும நிற்கினறனா மறறொரு பககம கனகவிசயா தலைமையிலே உததரன், விசிததிரன, சிததிரன், உருததிரன், பைரவன், சிஙகன, தனுததரன், சிவேதன முதலான ஐமபததிரணடு தோவீராகள படையுடன் நிறகின்றனா. பதினெட்டு நாழிகை போா நடககிறது. கனக விசயா சிறைபபடுகினறனர்]

---

## காட்சி 17

இடம் உத்தரதேசத்தின் அருகேயுள்ள பாசறை.
காலம் காலை.

[ஆங்காங்கே பாசறைகளில் வீரர்கள் மகிழ்ச்சியுடன் பாடிக்கொண்டிருக்கிறார்கள். செங்குட்டுவன் தன பாடி வீட்டிற் புன்முறுவலுடன் வீற்றிருக்கிறான் வில்லவன்கோதை ஒருபுறம் அமர்ந்திருக்கிறான் கனகவிசயா எதிரில் நிற்கின்றனா வில்லவன்கோதையின் முகத்திலே வெற்றிப்புன்னகை வீசுகிறது கனகவிசயா முகம் களையிழந்து நாணத்தால் வெளுத்திருக்கிறது அவாகள நிலத்தை நோக்கியவண்ணம் நிற்கின்றனா போாவீராகள் அவர்களின் அருகே காவலாக நிற்கின்றனர் ]

செங்குட். (புன்முறுவலுடன்) செருக்கிலே படிந்த சிறுமையோரே! ஆரியப்பேரரசர்களே! தமிழகத்தின் சிறப்பைக்காட்டவே உங்களைச் சிறைப்படுத்தினோம். போரிலே வீரத்தைக் கண்டீர்கள்! நேரிலே அழகைக் காண்பீர்கள். தண்டமிழைப் பழித்த—தமிழர் வீரத்தைப் பழித்த—உங்கள் நிலையை இப்போதாவது உணர்ந்தீர்களா? முன்னம் யாம் எம் அன்னையை நீராட்டி விற்பொறித்துச் சென்றபோது நீங்கள் இல்லாததாலே எளிதிற் பொறித்துச் சென்றதாகக் கூறிய உங்கள் நாவினால் இப்போது என்ன சொல்வீர்கள்? தேவாசுரப் போர் பதினெட்டாண்டுகளும், இராம ராவணப்போர் பதினெட்டுத் திங்களும், பாரதப்போர் பதினெட்டு நாட்களும் நடந்தனவென்று கூறுகிறார்கள். நீங்களும் உங்களைச் சார்ந்த ஐம்பத்திருவருமாகிய

ஆரியவரசர்களுடன் ஒரு தமிழன் செய்த போர் பதினெட்டு நாழிகைக்குள்ளேயே முடிந்ததையெண்ணிப் பாருங்கள்!

தமிழன் தன்னைப் பழிப்பதைச் சற்றும் பொறான் என்பதைக் கண்டீர்களா? வாய்ச்சொற்களினாலே வில்லிலிருந்து வரும் அம்பைத்தடுக்க வியலாதென்பதை இனியாவது உணருங்கள்! (வில்லவன்கோதையை நோக்கி) படைத்தலைவரே, காலம் போகிறது! புறப்படுங்கள்!

**வில்லவன்:** (எழுந்து வணங்கி) தங்கள் ஆணைப்படியிதோ புறப்படுகிறேன். இவர்களையும் அழைத்துத்தானே செல்லுதல் வேண்டும்?

**செங்குட்:** ஆம்! நம் நாட்டை நாடிவந்த பத்தினிக்குரிய கல்லைச் சுமக்கும் பேறு இவர்கள் பெற்றனர்! நம்மைப் பழித்ததற்காக ஒரு நன்மையைச் செய்தோம்.

**வில்லவன்** (புன்முறுவலுடன்) ஆம். "இன்னா செய்தாரை ஒறுத்தல் அவர்நாண—நன்னயஞ் செய்து விடல்" அன்றோ?

**செங்குட்:** (நகைத்து) நன்று! ஆயிரம் வீரருடன் சென்று விரைவிலே கல்லைக்கொண்டு வருக! நீங்கள் வரும் வரை இங்கேயேயிருப்போம், நினைவிலிருக்கட்டும். அங்கு எந்த முனிவருக்கும் இடையூறுண்டாகாமற் கொண்டு வருக!

**வில்லவ:** (வணங்கி) ஆணைப்படி நடக்கிறேம்.

[கனகவிசயர் பின்தொடரக் காவலர் சூழ வில்லவன்கோதை வெளியே செல்கிறான். செங்குட்டுவ

னும் வெளியேவந்து நிறகிறான். மங்கல இயங்கள் முழங்குகினறன போாவீராகள் ஆரவாரத்துடன் அணியணியாகச செல்கின்றனா. இடையே கனக விசயர் நடைபிணமபோலச செலகினறனர். வில்ல வன்கோதை ஒரு யானையின் மீது போாவீரர் சூழப் பின்னே செலகின்றான் செஙகுட்டுவன் அவாகள் சென்றபின தன் பாடி வீட்டுக்குள் நுழைகிறான். நூற்றுவாகன்னரின் தலைவனான கன்னன் படை வீரா சூழ வருகிறான.]

**செஙகுட்:** வருக ! நண்பரே ! வருக ! தங்கள் துணையாலே கங்கையைக் கடந்தேன், கடும்போரையுங் கடந்தேன்.

**கன்னன்** (புன்முறுவலுடன) எங்கள் துணைகொண்டு வென்றதாகக் கூறுவது முகமனே ! முன்னொரு முறை வநதபோது என்துணையா கிடைத்தது? நான் வேறொரு வேலையாக வந்தேன், என்னைத் தாங்கள் புகழ்வீர்களென்ற எண்ணத்தாலன்று.

**செஙகுட்:** நன்று ! என்ன நோக்கத்துடன் வந்தீர்கள்? எம் உடல் பொருள் ஆவியெல்லாம் உங்களுக்கே. நண்பருக்குதவாமல் எப்படியிருப்பது?

**கன்னன்.** (புன்முறுவலுடன்) தாங்கள் கங்கையின் தென்கரையிலே தங்கப் பாசறையொன்று அமைத்தோம். படைவீரர்கட்குத் தங்கியிருக்கும் அறைகள், உலாவும் பூம்பொழில்கள், அவைக்களம், விருந்துக் கூடம், மலர்ப்பொய்கைகள் எல்லாம் உள்ளன அங்கே ! எவ்வளவு காலம் வேண்டுமானாலும் அங்கிருக்கலாம். உணவுக்குரிய எல்லாப் பொருள்களும் சேமித்து வைத்துள்ளோம்.

**செங்குட் :** (மகிழ்வுடன்) உங்களுக்கு மிகுதியும் கடமைப் பட்டுள்ளேன் நான். என்ன கைம்மாறு செய்வேன்.

**கன்னன் :** (புன்முறுவலுடன்) தங்கள் நட்பிற்குச் செய் யுங் கடமையேயிது. தமிழ்நாட்டு நாகரிகமும் தமிழ்க் கலையும் எங்கள் உள்ளத்தைக் கவர்ந்துவிட்டன! அவை எங்கள் நாட்டிலே பரவ வகைசெய்தல் வேண்டும். இருநாடும் ஒருநாடாக இசைதல் வேண்டும்!

**செங்குட்** (புன்முறுவலுடன்) எனக்கும் அவ்வெண்ண முண்டு. இதுவரையிலுங்கூடப் பல பழக்கவழக்கங் கள் நம்மையறியாமலே இயற்கையாகக் கலந்து விட்டன. எங்கள் நாட்டிற்குத் தொழிலாளிகளாக வந்தவர்கள், படைவீரர்களாக வந்தவர்கள், கலை ஞர்கள் ஆகியோரால் சில பழக்கவழக்கங்கள் பொதுமக்களிடையே கலந்துள்ளன. (ஒரு வீரன வருகிறான்) என்ன வேண்டும்?

**வீரன் :** (வணங்கி) சேரர்பெருமான் வாழ்க! யாரோ இரு பெண்கள் தங்கள் சேவையை நாடி வெளியே காத் திருக்கிறார்கள்.

**செங்குட்** (வியப்புடன்) இருபெண்களா? பாசறையைத் தேடியா வந்தார்கள்? அவர்கள் யார்?

**வீரன்** உத்தரதேசத்து அரண்மனை நாட்டியப் பெண் களாம். தங்களிடம் தங்கள் நாட்டு நடனங்காட்ட விரும்பி வந்தார்களாம்!

**செங்குட் :** நன்று! அழைத்து வருக! (வீரன் வணங்கிச் செல்கிறான்) தங்கள் நாட்டுக் கூத்தும் எங்கள்நாட்டு ஆடலுங் கூடக் கலந்துள்ளன.

**கன்னன :** இருக்கலாம் தமிழ்மறையென்று போற்றப் படுந் திருக்குறள் கருத்தும் எங்கள் நூற் கருத்துக் களும் சில இடங்களில் ஒன்றியுள்ளன. எனினும், திருக்குறளைப்போல எங்கள் நூல் எல்லோராலும் போற்றமுடியாதது.

**செஙகுட்** (புன்முறுவலுடன) ஆம். தங்களுடைய சம நோக்குக்கு மகிழ்ச்சியடைகிறேன். (வீரன நாட்டியப பெண்களை அழைத்து வருகிறான் வநத பெணகள செஙகுட்டுவனை வணஙகுகிறாகள் வீரன செலகிறான்) பெண்மணிகளே! நீங்கள் யார்?

**ஒருத்தி :** (வணககததுடன) சேரமன்னர் வாழ்க! நாங்கள் கனகவிசயரின் அரண்மனை நாட்டியப்பெண்கள்

**செங்குட்** (புன்முறுவலுடன) புலிகளிருக்குமிடத்தை மான்கள் நாடி வருவதுண்டோ? படைவீரர்களைப் பற்றி அச்சமில்லையா?

**அவள் :** சிறிதும் அச்சமேயில்லை. முன்வந்தபோதும் இப்போதும் தமிழ்வீரரின் ஒழுக்கத்தைக் கண்டு வியந்திருக்கிறோம். அவர்களால் எங்களுக்குச் சிறிதுங் கெடுதியுண்டாகவில்லை.

**செங்குட் :** எங்கு வந்தீர்கள்?

**அவள :** எங்கள் நாட்டியத்தைக் காட்டிப் பரிசுபெற வந்தோம்.

**செஙகுட் :** நன்று! பார்க்கலாம்!

[நடிக்கிறார்கள். அரசன் ஒருவன் தன் மனைவி யிடங் கூறிவிட்டுப போருக்குப போகிறான் மனைவி பிரிவைப் பொறுக்கமுடியாமல் வருநதுகிறாள். அர சன் போரிலே எதிரியை வென்று தோற்றோடிய

எதிரியைச் சிறைப்படுத்தி வருகிறான். தன் நகரச் சிறையிலடைக்கிறான். தன காதலியைக் கண்டு அவள் கவலையை மாற்றுகிறான் அப்போது அவனுள்ளம எதிரியின் நிலையை எண்ணுகிறது. தன் காதலியைப் போலவே அவன் காதலியும் வருந்துவாளென நினைத்தவுடன் இரக்கம உண்டாகிறது. அரசியும் தோற்றோடிய எதிரியைச் சிறைபபடுத்திக் கொணர்ந்தது தக்கதெனச் சாற்றுகிறாள ஆகவே, அவன உடனே சென்று சிறையிலிருந்து எதிரியை விடுவித்துப் பெருந்தன்மையோடு பொருள் பல உதவி, அவன் நாட்டையும உரிமையாக ஆள அளித்து விடுதலை செய்கிறான ]

ஜெகாருட் : (வியந்து) மிக நன்று ! (தன் கழுத்திலிருந்த விலையுயர்ந்த முத்துமாலையைக் கழற்றி) இதனைப் பெற்றுக்கொள்க.

ஒருத்தி : (வணக்கமும நாணமுந் தோன்றக் கடைக்கண்ணால் அவனைப் பார்த்தவாறே) அரசர் பெருமானிடத்தில் இப்பரிசை விரும்பி வந்தவர்களில்லை நாங்கள். தங்கள் அரண்மனை நாட்டியப் பெண்களாக இருக்க விரும்பி வந்திருக்கிறோம். அருள் செய்தால் நலமாயிருக்கும்.

ஜெகாருட் : (மகிழ்வுடன) நன்று ! நாமே அதனைக்கேட்க விரும்பியிருந்தோம். என் அரண்மனையிலே பல நாட்டு நாட்டியப் பெண்களும் இருக்கிறார்கள். எனினும், இப்பரிசைப் பெற்றுக்கொள்வதில் தவறில்லையே. இதை வாங்கிக்கொள்.

**அவள் :** (பணிவுடன் வாங்கிக்கொண்டு) பெண்ணறிவால் அறியாமல் முதலில் மறுத்தேன். பொறுத்தருள்க !

தங்கள் அருள் எனக்கும் என் தோழிக்கும் மிகவும் களிப்பையளித்தது.

**செங்குட் :** உங்கள் வரலாற்றை யறியலாமோ?

**அவள் :** (நாணத்துடன்) எங்கள் வரலாற்றிலே ஒன்றும் சிறப்பில்லை.

**செங்குட் :** (கன்னனை நோக்கி) கன்னரே! இப்பெண் அரச குடும்பத்தைச் சேர்ந்தவள்போலக் காணப் படவில்லையா?

**கன்னன் :** எனக்கும் ஐயமே. மாண்புறு தோற்றம்! செல்வத்திலே பழகிய மெய்! கலையுணர்ந்த பேச்சு!

**அவள் :** (நாணத்துடன்) அதிகமாகப் புகழவேண்டாம் இந்த நாட்டியப்பெண்ணை! ஏதோ பரமனருளாலே இயற்கையாகவே அச்செல்வம் கிடைத்தது. தமிழரசர் சேவை, தமிழ் நாடகக்கலை ஆகியவற்றை விரும்பியே அடியாள் அங்குவர விரும்புகிறேன்.

**செங்குட் :** (புன்முறுவலுடன்) நன்று. எம் உரிமைப் பெண்களோடு இருக்க.

---

## காட்சி 18

இடம் கங்கையாற்றின் தென்கரையிற் பாசறை.
காலம் காலை.

[சேரன் செங்குட்டுவன் தன் பாடி வீட்டிலமர்ந்திருக்கிறான். வீரர்கள் யாவரும் தத்தம் கூடாரங்களில் அமர்ந்தும் உலாவியும் உரையாடியும் உள்ளனர். வில்லவன்கோதை பாசறையின் வெளியிடத்திலே நிற்கிறான். ஒருவன் ஒரு சங்கையெடுத்து ஊதுகிறான். வீரர்களெல்லோரும் விரைந்துவந்து அணியணியாக நிற்கின்றனர். வில்லவன்கோதை ஒருயர்ந்த மேடையில் ஏறுகிறான்.]

**வில்லவன் :** வீரர்களே! நம் அரசர்பெருமான் நம் படைவீரருக்கெல்லாம் வெற்றியிற் கிடைத்த பொருளைப் பங்கிட விரும்புகிறார். 'பகையரசரின் உள்ளம் பதைபதைக்கப் போர்செய்திறந்த பண்புடைய வீரரின் மைந்தரும், தலையுந் தோளும் போரிலே விழ விலைபெற்ற வீரரின் மைந்தரும், வாட்போரிலே வாளின் உயர்நிலை கண்டு வீழ்ந்த வாளாளரின் மைந்தரும், தம் காதலியார் தம்மைத் தழுவி உடன் வரும்படி விண்ணுலகடைந்த மேலோரின் மைந்தரும், தேரிலேறிப் போரினை முடித்து வானிலேறிய வள்ளல்களின் மைந்தரும், இவ்வாறு இறவாமலே வெற்றி விளைத்த வீரர்களும் வருக!' என்று மன்னர்பிரான் அழைக்கிறார். யாவரும் ஒழுங்காக நிற்பீர்களாக!

[வில்லவன்கோதை இறங்கிச் செல்கிறான். பல வீரர்கள் பொற்காசுகளையும் அணி மணி மாலைகளையும் கொண்டுவந்து குவியல் குவியலாகக் குவிக்கிறார்கள்.

செங்குட்டுவனும் வில்லவன்கோதையுமாக அங்கே வருகிறார்கள். வில்லவன்கோதை அறிமுகஞ் செய்து வைக்க வணங்கிய வீரருக்கெல்லாம் செங்குட்டுவன் தன் கையாலே பரிசுகளை வழங்குகிறான் பிறகு, முன் போல அணியணியாக யாவரும் நிற்கிறார்கள்.]

**செங்குட்:** (மேடைமீதேறி) வீரர்களே! உங்கள் அன்புடைமைக்கு மகிழ்கிறோம் ஏதேனும் மனக்குறையுள்ளோர் அணியை விட்டு முன்வந்து கூறிக் கொள்ளலாம் (ஒருவரும் முன் வரவில்லை) நன்று! இறைவன் அருள் உங்களுக்கு முற்றுங் கிடைப்பதாக! சென்று உங்கள் விருப்பம்போல் இருப்பீர்களாக!

**எல்லோரும்:** மன்னர்பிரான் வாழ்க! தமிழ் தழைக்க! தமிழ்நாடு வெல்க!

---

## காட்சி 19

இடம்: கங்கைக் கரையிற் பாசறை.
காலம்: மாலை.

[சேரன் செங்குட்டுவன் தன் பாடிவீட்டில வீற்றிருக்கிறான் அவன எதிரிலே மாடலன என்னும் அந்தணன் ஒருவன அமாந்திருக்கிறான்]

**செங்குட்:** (அன்புடன்) மாடலரின் வருகையால் என் உள்ளம் இன்பமடைகிறது. ஏது இப்புறம் போந்தது?

**மாடலன:** சேரர் பிரான் வாழ்க! கங்கையாட வந்தேன். அதனாலே கங்கையினுந் தூயவரான தங்களைக் காணும் பேறும் பெற்றேன்.

செங்குட (நகைத்து) கங்கையாடுவதற்கு மாறாக என்னுடன் ஆடினாலே தங்கள் பாவம் பறந்துவிடுமோ?

மாடலன்: (புன்முறுவலுடன்) தற்புகழ்ச்சியை விரும்பாத தங்கள் நிலையைத் தாங்க ளெப்படி அறியமுடியும்? உண்மையும் வீரமும் எளிமையும் உடைய தங்களெதிரே தங்களை முகமனாகப் புகழ முன்வருவேனோ? உண்மையிலே தங்களோடு உரையாடினாலும் பாவம் பறக்கும்.

செங்குட (நாணந் தோன்ற) போதும் புகழ்ச்சி!

மாடலன் (நகைத்து) நன்று! இனி ஒன்றும் இயம்பேன். மாதவி காவிரிப்பூம்பட்டினத்திலே பாடிய கானற் பாணி கனகவிசயருடைய முடித்தலையை நெரித்ததையுங் கேள்வியுற்றேன். அக்காட்சியையுங் காண வந்தேன். ஆக, இந்த நன்மைகளை இப்போது பெற்றேன்.

செங்குட்: (வியந்து) கனகவிசயருடைய முடித்தலையை இமயக் கல்லன்றோ நெரித்தது? மாதவி யென்னும் பெண் யார்? அவள் செயல்—பாட்டு—எப்படி முடித்தலையை நெரிக்கும்?

மாடலன். (புன்முறுவலுடன்) இது வியப்புக்குரிய செயலாயினும் உண்மையில் நடக்கக்கூடியதே! நடந்ததே!

செங்குட் மறைவின்றி விளக்கிக் கூறுக.

மாடலன்: மாதவி யென்பவள் ஒரு நாடகக் கணிகை. அவளைக் கோவலன் காதலித்துப் பொருளையெல்லாம் அழித்தான். அவன் யாரென்றறிவீர்கள்.

**செங்குட** கண்ணகியின் கணவனோ?

**மாடலன்·** அவனே தான். மாதவி இயற்கையில் நல்லவளே. மரபுத் தொழிலை வெறுத்துக் கோவலன் ஒருவனையே காதலித்தாள். அவள் அவனைப் பொருளுக்குக் காதலிக்கவில்லை. அவனுடைய பணபுக்காகவே காதலித்தாள் எனினும், கோவலன் ஊழ்வினை வழிப்பட்டுக் குந்தித்தின்றான், குன்றும் மாண்டது!

**செங்குட** அவனைக் காதலித்து முதலிலே மணந்தவள் யார்?

**மாடலன்** கண்ணகியே. அவளை வாடவிட்டுத்தான் மாதவியை நாடித் தொட்டான்! அது பிழையே. ஆனால், அவன் பிழையே யன்றி மாதவியின் பிழை யன்று.

**செங்குட** நன்று, மேலே கூறும்.

**மாடலன்** ஒருநாள - இந்திர விழாவின் முடிவிலே - கோவலனும் மாதவியும் கடற்கரையிலே அமர்ந்து பாடிக்கொண்டிருந்தனர். அவன் பாட்டிலே - கானற் பாணியிலே - காதலியைப் பிரிந்த காதலன் தனிமை நிலை யிருந்தது, மாதவிக்குச் சிறிது மனத் தாங்கல். 'நாம் அருகிலிருக்கும்போதும் பிரிவுணர்த்தும் பாட்டுப் பாடுவானேன்?' என எண்ணினாள். எண்ணியதோடு நின்றிருந்தால் இந்த அல்லலில்லை.

**செங்குட் :** ஊடல் கொண்டு ஏதாவது உரைத்தாளோ?

**மாடலன் :** அங்ஙனமுஞ் செய்யவில்லை, அவனைப் போலவே அவளும் பாடினாள். பிரிந்த காதலனை

நினைந்து வருந்துபவள் போல - ஏக்கந் தோன்ற - இனிமையாகப் பாடினாள். அவ்வாறு 'அவள் பாடிய கானற்பாணியால் அவன் தாக்குண் டான். புலியறைந்தாற்போலாயிற்று அவன் நிலை. வெருண்டு ஓடினான், ஒழுக்க நெறியிலே காலை வைத்தான், அப்போதுதான் அவனுக்குத் தன் வறிய நிலை அறிவிலே புலனாயிற்று. கண்ணகி யுடன் மதுரைக்குப் புறந்துவந்து ஊழ்வினைக்கு இரையானான். கணவனை யிழந்து, மதுரைக் காவலனை அறத்தாலே வீழ்த்தி, மதுரையை யெரித்த கண்ணகி பேற்கு நோக்கி வந்தாள்.

செங்குட்- அப்புறம் அறிவோம்.

மாடலன் ஆகவே, கடற்கரையிலே மாதவி கானற் பாணி அக் கருத்திலே பாடாதிருந்தால் கனக விசய ருடைய முடித்தலை நெரிக்கக் கண்ணகியம்மை வந் திராள்.

செங்குட- நீங்கள் கோவலனை நன்கறிவீர்கள் போலும்.

மாடலன அவன் என் ஆருயிர் நண்பன் - மாதவியைக் காதலித்ததைத் தவிர - மனைவியை வருத்தியதைத் தவிர — வேறு தீநெறியிலே செல்லாதவன். பொதி யிலுக்குச் சென்றுகொண்டிருந்த நான மதுரையிலே கண்ணகியுடன் கோவலனைக் கண்டு கலங்கினேன்.

செங்குட் : (புன்முறுவலுடன) மாதவியைப் பிரிந்ததற் காகவா?

மாடலன் : அன்று. பெருங்குடி வணிகனான அவன் குலப்பிறப்பாட்டியான கண்ணகியுடன்—வெளியில் நடந்தறியாத மெல்லியலுடன்—வறிய நிலையிலே

காணப்பட்டதுதான் கலக்கமுண்டாக்கியது. பொதியிலுக்குச் சென்று திரும்பியபோது மதுரையில் விளைந்த மனங்கலக்கும் நிலையைக் கண்டேன். இறந்துவிட்டவர்கள் இருக்கும் நண்பர்களுக்கும் உறவினர்க்கும் உண்டாக்கும் ஏக்கத்தை நுகர்ந்தேன்.

**செஙகுட் :** (இரக்கததுடன்) உண்மையே. இறந்தவர்களால் இருப்பவர்கள் அடைந்த நன்மையையும் நட்புரிமையையும் எண்ணி வருந்துவது இயற்கையே. இறந்தவர் இருந்த இடம் வறிதாயிருப்பதையும், அவர் தொட்ட பொருள்கள் வாளாகிடப்பதையும், வேறொருவர் இவற்றை நுகர நேர்வதையும் உன்னும்போது உள்ளம் அவலத்தால் அலைவுறும் என்பதை அறியாதவர் யார்?

**மாடலன :** கோவலனுங் கண்ணகியும் அடைந்த கோலத்தை அவர்கள் பெற்றோர்க்குக் கூறும் பேற்றையும் யானே பெற்றேன் எங்ஙனங் கூறுதிருக்கவியலும்? கேட்ட இருவருடைய தந்தையரும் வாழ்வை வெறுத்துத் துறந்தனர் அந்தோ! அன்னையரோ ஆவி துறந்தனர்

**செங்குட் :** அடடா!

**மாடலன் :** மதுரையிலே நடைபெற்ற மாண்பைக் கூறவில்லையே! கவுந்தியடிகள் என்னும் துறவியாரொருவர்—மதுரைக்குக் கோவலனையும் கண்ணகியையும் அழைத்து வந்தவர்—கலக்கமுற்று உண்ணாநோன்பொடு வெளிவந்து உயிர்விட்டார். அவராலே கண்ணகியை அடைக்கலப்பொருளாக மாதரி என்ற இடைச்சியொருத்தி ஏற்றாள். அவள் தன் அடைக்

கலப் பொருளைக் காவாமற்போக நேர்ந்ததால் மதுரையெரிந்த தீயிலேயே தன் பாவத்தைக் கழித்தாள்—உயிர் விட்டாள்.

செயகுட்: மதுரையழிவுக்கு இவைகளெல்லாம் தூவானம் போலும்!

மாடலன்: இவற்றையெல்லாங் கண்ட நான் மனத்தெளிவின்பொருட்டு நாடு வலம்வரப் புறப்பட்டேன். பல இடங்களையுங் கண்டதனாலே என் உள்ளம் சிறிது தெளிவுற்றது. எனினும், இன்னும் அந்தக் கவலையின் தேய்வு சிறிது இல்லாமலில்லை.

செயகுட்: பாண்டிய நாட்டை இப்போது ஆள்வோர் யார்!

மாடலன்: கொற்கையிலிருந்த வெற்றிவேற்செழியன் ஆள்கிறான்.

செயகுட்: சோழநாட்டை?

மாடலன்: பெருங்கிள்ளி ஆள்கிறான்.

செயகுட்: இப்போது இரண்டு நாடும் நலந்தானே?

மாடலன்: ஆம்.

செயகுட்: தங்களாற் கண்ணகியின் முழு வரலாற்றையும் அறிந்தோம். கண்ணகியின் சிலையை நாளைக்கு நீர்ப்படை செய்வோம். தாங்களும் உடனிருந்து அவ்விழாவை நடத்தி வைப்பீர்களாக.

மாடலன்: நன்று.

---

# காட்சி 20

இடம் கங்கையின் தென்கரை.

**காலம்: காலை**

[பாசறையிலிருந்து கங்கைத்துறை வரையில் இரு மருங்கிலும் வாளேந்திய வீரர் நிற்கின்றனர் சங்குகளும் கொம்புகளும் முழங்குகின்றன மங்கல முரசு ஒலிக்கிறது வீரர்கள், 'கண்ணகி வாழ்க! குடமலையரசி வாழ்க! பத்தினிக் கடவுள் வாழ்க! என மாற்றி மாற்றி ஆரவாரிக்கின்றனர். சேரன் செங்குட்டுவனும் இளங்கோவடிகளும் நூற்றுவர் கன்னரும் மாடலனும் முன்னே செல்கின்றனர் கனகவிசயர் கண்ணகிச் சிலையைச் சுமந்து செல்கின்றனர் கங்கைத் துறையை அடைந்தவுடன் சிலை கீழே வைக்கப்படுகிறது ]

**எல்லோரும்** கண்ணகி வாழ்க! வீரபத்தினி வாழ்க!

**இளங்கோ:** (மலர் சூட்டி அணிசெய்து) கற்புக்கரசியே! வீரபத்தினியே! பாண்டி நாட்டின் தலைநகரைச் சீறி எரித்த நின் உள்வெம்மை ஆறுவதற்குக் கங்கை நீரிலே இதனை நீர்ப்படை செய்கிறோம். நீ இச் சிலையை இருப்பிடமாகக்கொண்டு தண்மை யடைக! கற்புடைய மாதரைப் பெரியோரும் வழி படுவரென்பதை உன் வாயிலாக உலகறிகிறது!

[நறும்புகை யூட்டுகின்றனர். பிறகு வீரர்கள் அதனைக் கங்கை நீரிலே ஆட்டுகின்றனர் வெளியே கொண்டுவந்து மறுமுறையும் பூமாலையிட்டு நறும புகையூட்டுகின்றனர். நீராட்டுவிழா முடிகிறது எல

லோரும 'கண்ணகி வாழ்க!' என வாழ்த்தியவாறே கனகவிசயர் முடிமீது அதனைச் சுமத்திப் பாசறைக்குப் பல்வகை இசைக் கருவிகள் ஒலிக்க எடுத்துச் செல்கின்றனர்]

---

## காட்சி 21

இடம்: வஞ்சிமாநகரின் அரண்மனையின் அந்தப்புரம்

காலம்: மாலை

[வேண்மாள் பொற்கட்டிலிற் கவலை மீக்கூரக் கலங்கி அமர்ந்திருக்கிறாள் தோழியர் சூழ்ந்திருக்கின்றனர்]

ஒரு தோழி: (பரிவுடன்) கலக்கமேன்? அம்மா! கதிரவன் ஒளி மழுங்கினும் நம் காவலர் வெற்றி மழுங்காது என்பதை யாவர் அறியார்?

வேண்மாள்: பகைவர்களின் எண்ணிக்கை அதிகமெனக் கேட்டோமே! மயிலின் பீலியாயினும் அளவுக்கு மேலேற்றினால் வண்டியின் அச்சு முறிந்துவிடுமே!

மற்றொரு தோழி: காகங் கோடி கூடினும் ஒரு கல் போதாதோ? மலைநிறைந்த பஞ்சுப்பொதிக்கு ஒரு சிறு தீப்பொறியே சாலுமே! நம் அரசரின் இயல் பறிந்த தாங்களா இவ்வாறு கவலைப்படுவது? வஞ்சியார் எப்போதும் வஞ்சியாமலே வெற்றிகொள்வார்கள்.

**வேண்மாள் :** அவர்கள் போர்க்குச் சென்று முப்பத்திரண்டு திங்கள்களாயினவே! அவர் வெற்றியடைவது இயல்பேயாயினும் என்னுள்ளமோ ஏங்குகிறது! மேலும் வெற்றியும் தோல்வியும் ஒருவர் பங்கல்லவே? அவர் காலமெல்லாம் பாசறையிலேயே கழிகிறது! என் காலமெல்லாம் அவரையெண்ணி ஏங்குவதிலேயே கழிகிறது!

[ஒரு பணிப்பெண் ஓடிவருகிறாள.]

**பணிப் பெண்** அம்மா! வருகிறார் அரசர் வெற்றியோடு

[பெருமூச்சு வாஙக நிற்கிறாள ]

**வேண்மாள** (மகிழவுடன் எழுநது) உண்மையாகவா?

**அவள்.** ஆம் அம்மா! ஒரு வீரன் வந்து அரசர் வருவதாகத தங்களிடம் அறிவிக்க வாயிலில் வந்திருக்கிறான், அம்மா!

**வேண்மாள** ஓடி அவனை வரச்சொல். இந்த மாலையைப் பெற்றுக்கொள்.

[ஒரு பொன்மாலையை அளிக்கிறாள. அவள பெருமகிழ்வுடன் வாஙகிககொண்டு ஓடுகிறாள ]

**ஒரு தோழி** அம்மா! இனியாவது எங்கள் சொல்லில் நம்பிக்கை கொள்வீர்களா?

**வேண்மாள.** (அவளைத தழுவிககொண்டு) எனக்கும் நம்பிக்கையுணடு. இருந்தாலும் . . ....

**அவள .** அன்புள்ளம் அல்லலடைவது வழக்கந்தான்.

[வீரன் வருகிறான்.]

**வேணமாள :** நம் அரசருக்கு வழக்கம்போல் வெற்றியாமே?

**வீரன் :** (வணங்கி) நம் அரசர் பெருமான் கனகவிசயரை யும் வேறு ஐம்பது அரசர்களையும் பதினெட்டு நாழிகையிலே வென்றுவிட்டார்! கனகவிசயருடைய முடித்தலையிலே இமயத்திலிருந்து கல்லைக்கொண்டு வந்து கங்கையிலே நீராட்டிக்கொண்டு நகருக்கு வெளியே தங்கியிருக்கிறார்கள்.

நம் அமைச்சர் ஆணைப்படி நகரையணி செய்ய முரசறைந்தாயிற்று. நகர் அழகாக அணி செய்யப் படுகிறது. இன்னும் இரண்டு நாழிகைக்குள் அரசர் பெருமான் வெற்றி மங்கையுடன் வருவார். தங்களுக்கு என்னை முன்னரே அறிவிக்க ஆணை யிட்டார்.

**வேண்மாள** (மகிழ்ச்சியுடன் ஒரு முத்து மாலையை அவ னுக்குக் கொடுத்து) நன்று! சென்று வா.

[வீரன் வணங்கிச் செல்கிறான்]

**ஒரு தோழி :** (புன்னகையுடன்) என்ன அம்மா! யாரோ ஒரு மங்கையை உடனழைத்து வருவாராமே! அவன் அதைக் கூறியதற்குப் பரிசு வேறு கொடுத் தீர்கள்!

**வேண்மாள** (நகைத்துக்கொண்டே பரபரப்புடன்) அதற் குத்தானே சென்றார்? அவனையும் அவளையும் வர வேற்கவேண்டும்! அந்தப்புரத்தை ஒரு நொடியில் நன்றாக அணி செய்யுங்கள்! மலர் மாலைகளை அங் கங்கே தூக்குங்கள். நவமணி மாலைகளை நாற்றுங் கள்! (ஒரு தோழியை நோக்கி) எனக்கு நீராட நறு மணப்பொடி கலந்த நீரையும் மற்றவற்றையும் நீராடும் அறையிலே அமைக்கக் கட்டளையிடு. (மற்

றொருத் தோழியை நோக்கி) நீ என் ஒப்பனை அறைக்குப்போய் எல்லாவற்றையும் எடுத்து வை!

**அந்தத் தோழி** (நகைத்து) எல்லாவற்றையுமா அணிந்து கொள்வீர்கள்?

**வேண்மாள்** உனக்கேது அறிவு? வேண்டிய எல்லாவற்றையும் என்று குறிப்பாகத் தெரிந்துகொள்ள முடியாதா? குறிப்பிற் குறிப்புணராதவள்.... .

**அவள்:** (பயந்தவள் போல) ஐயையோ! வேண்டாமம்மா! குறிப்புணரும் வேலை கொடிய வேலை இதோ நான் ஓடுகிறேன். [செல்கிறாள்]

**ஒரு பணிப் பெண்:** (வந்துகொண்டே) நீராடவரலாம் அம்மா!

**வேண்மாள்** இதோ வந்தேன். [செல்கிறாள்.]

---

## காட்சி 22

இடம் வஞ்சிமாநகர்
காலம் மாலை மறையும் நேரம்

[நகரெங்கும் தோரணங்களும் மலர் மாலைகளும் கொண்டு தெருக்கள் ஒப்பனை செய்யப்பட்டுள்ளன. ஒவ்வொரு வீடும் நிறைகுடமும் முளைப்பாலிகைகளும் மகிழ்ச்சியும் நிறை விளக்குகளுமாகக் காணப்படுகிறது. தெருக்களிற் பழமணல் மாற்றிப் புதுமணல் பரப்பப்பட்டுச் சுண்ணப்பொடி தூவப்பட்டுள்ளன. ஆடவரும் பெண்டிருமாகக் கையிற் சுண்ணப்பொடியும் மலர்களும் ஏந்தி நிற்கின்றனர். வில்ல

வன்கோதை ஒரு புரவியின்மேல் அமர்ந்து முன்வர, வீரர் பலர் அணியணியாக முன்னும் பின்னும் வரப் பட்டகளிற்றின்மேற் சேரன்செங்குட்டுவன் இடையிலே வர, அழும்பில்வேள் ஒருபுரவியின்மேற் பின்னே வர, ஒவ்வொரு தெருவிலும் உலாவாக வருகிறார்கள். நகர மக்கள் 'அரசர் வாழ்க! வில்லவன்கோதை வாழ்க!' என ஆரவாரித்து மலர்களையும் நறுமணப் பொடியையும் வாரியிறைக்கின்றனர் நகர் வலம் முடிந்து அரண்மனையை அடைகிறார்கள் எல்லோரும் ஊர்தியினின்றும் இறங்குகின்றனர் அரசன் அரண்மனைக்குள் நுழைய, அமைச்சரும் படைத் தலைவனும் வணங்கி விடைபெற்றுச் செல்கின்றனர். வேண்மாள் அரசனை நிறை குடங்களுடனும் அணி விளக்குகளுடனும் தோழியருடன் எதிர்கொள்கிறாள் மஞ்சள்நீர் ஆலம் சுற்றி நெற்றியிற் பொட்டிட்டு வணங்குகிறாள். அரசன் அவளை அன்புடன் நோக்கியவாறு அவள் கையைப் பற்றிக்கொண்டு அரண்மனைக்குள் நுழைகிறான் ]

## காட்சி 23

*இடம் : வஞ்சியிற் சேரன்செங்குட்டுவன அவை*

*காலம் : மாலை*

[*சேரன் அரசி வேண்மாளுடன் அரியணையிலே வீற்றிருக்கின்றான் மாடலன், சாத்தனார், இளங்கோ வடிகள், அழும்பில்வேள, வில்லவன் கோதை, மற்று முள்ள பெருங்குடி மக்கள் தத்தம இருக்கையிலே இருக்கின்றனர்*]

**செங்குட் :** (*அழும்பில்வேளை நோக்கி*) கண்ணகியம்மைக் குக் கோயில் கட்டி முடிந்ததா ?

**அழும்பில் :** (*எழுந்து வணங்கி*) மன்னர் வாழ்க ! கட்டி முடிந்தது. வந்து பார்வையிடலாம்.

**செங்குட் :** நன்று, கைதேர்ந்த சிற்பிகளைக்கொண்டு கண்ணகியம்மையின் படிவத்தைச் சமைக்கவேண்டும். நம் அன்னையார்க்குப் படிவமமைத்த சிறபி களையே அழைத்துக் கூறுக !

**அழும்பில் :** அவ்வாறே கூறுகிறேன்.

**செங்குட் :** ஒரு வாரத்தில் முடித்தல் வேண்டும்.

**அழும்பில் :** ஆணைப்படி.

**செங்குட் :** போரில் இறந்த வீரர் குடும்பங்களைக் கணக் கிட்டு எல்லா நலன்களையும் இனிதே செய்து தருதல்வேண்டும் எம்முடைய பார்வையிலே தக்கது செய்க.

**அழும்பில் :** அரசர் பெருமான் திருவுளப்படி நடக்கின் றேன்,

செங்குட் : வடநாட்டு ஆரியரின் செருக்கைப் பொடிபடுத்திய வில்லவன்கோதைக்கும், அவர் தலைமையில் வெற்றியைத் தந்த பிற படைத் தலைவர்க்கும் பரிசளிக்க விரும்புகிறேம். நாளைக்கு அந்த விழாவுக்கு வகை செய்க!

அழும்பில் . (மகிழ்வுடன்) அங்ஙனமே செய்கிறேன்.

[ஒரு காவலன் வருகிறன்]

செங்குட எங்கே வந்தாய்?

காவலன் (வணங்கி) சேரர் பெருமான் வாழ்க! தூதுவர் தலைவர் நீலனர் வந்திருக்கிறர்

செங்குட் : (புன்முறுவலுடன்) வரச்சொல்.

[காவலன் வணங்கிச் செல்கிறன]

கனகவிசயரைச் சோழ பாண்டியரிடங் காட்டிவர நீலனை விடுத்தோம். அந்த அரசர்கள் மகிழ்ந்து நம் வெற்றியைப் பாராட்டியிருப்பர்.

வில்லவன் (மகிழவுடன) ஆம். [நீலன் வருகிறன்]

செங்குட் வாரும் நீலரே! அமரும் இருக்கையில்! உரையும் உற்றதை!

நீலன் (வணங்கி) குடவர் பெருமான் வாழ்க! நிகழ்ந்தவை தங்கள் திருவுளத்திற்கு மகிழ்வைத் தரா வென நினைக்கிறேன்.

செங்குட் (திகைத்து) என்ன! என்ன!! நன்முக வரவேற்றனரா? இல்லையா?

நீலன . நன்முக வரவேற்றனர். எனினும், கனகவிசயரைச் சிறைப்படுத்தியதை விரும்பவில்லை.

[எல்லோரும திடுக்கிடுகின்றனா]

செங்குட் : (சிந்தனையுடன்) ஏன்? என்ன நடந்தது? விளக்கமாகக் கூறும்.

நீலன் : முதலிற் சோழரிடஞ் சென்றேன். பெருங்கிள்ளி யென்னும் அம் மன்னர் வச்சிரம், அவந்தி, மகதம் முதலான நாடுகளின் திறையால் பொலிந்த மண்டபத்து வீற்றிருந்தார். கனகவிசயருடன் சென்று வணங்கினேன். புன்முறுவலுடன் வரவேற்று இருக்கையளித்தார். பிறகு, வந்ததை வினவினார், கூறினேன். கேட்டுவருந்தினார். "வாளையுங்குடையையும் போர்க்களத்திலிழந்து தோல்வியடைந்து தப்பியோடிய இவர்களைச் சிறைப்பிடித்துக் கல்லைச் சுமக்கச் செய்தது செத்த பாம்பையடித்ததைப் போன்றது," என்றார்.

செங்குட : (சினங்கொண்டு) பாண்டியன் பகர்ந்தது என்ன?

நீலன் : "வெற்றியை விரும்பிக் களிறூர்ந்து வந்தபோது கொண்ட குடையின் காம்பை, ஆடலாசிரியன் கோலாகப் பயன்படுத்திக்கொண்டு கூத்தாடியைப் போலத் தப்பியோடிய பேடியரைப் பிடித்துச் சிறைப்படுத்திய இந்த வீரம் எமக்குப் புதியது!" என்றார்.

செங்குட : (கண் சிவந்து பெருமிதத்துடன்) இகழ்ந்தவர்களை யின்னது செய்வோம் எனக் கூறுரைத்தோம். அவ்வாறே ஆரியவரசர் செருக்கை யடக்கினோம். அவர்கள் மணிமுடியிலே பத்தினிக் கல்லைச் சுமத்தினோம். இச் செயலை அவர்கள்—தமிழரசர்கள்—தம் வெற்றியாகப் போற்றுதல் வேண்டும். பொறாமையினாலே இகழ்ந்தனர். (பல்லைக் கடித்து) வடநாட்டின்மேல் வளர்ந்த படை

உள்நாட்டின்மேல் உலாவல் உறுமோ? படைத் தலைவரே! என்ன இயம்புகிறீர்?

**வில்லவன்** (எழுந்து சிறப்புடன்) பிறர் இகழ்வதைப் பொறுத்தல் வீரர் செயலன்று அரசர் பெருமான் விருப்பம் எப்படியோ அப்படியே நடக்கின்றேன். படை திரட்டட்டுமா?

**மாலன்** (எழுந்து) சீற்றந்தணிதல் வேண்டும் வேந்தே. தங்கள் வாழ்நாள் பொருநையாற்றின் மணலினும் அளவிற் சிறப்பதாக! என் சொல்லைச் செவியேற்க வேண்டும். தங்களுக்கு ஐம்பது ஆண்டுகள் கழிந்தன. இதுவரையிலே போர் வாழ்விலே தோய்ந்தீர்கள். கண் சிவப்பதும் மெய் துடிப்பதும் வேலேந்துவதும் வாளேந்துவதும் இரத்தத்திலே முழுகி விளையாடுவதும் வெட்டுண்டோர் உடல் துடிப்பதைக் கண்டு மகிழ்வதுமே உங்கள் காட்சியாக இருந்தன! உணவும் உடையும் உறக்கமும் போர்க்களமே! வீரமாதுடனே விளையாடி விளையாடிக் களைத்தீர்கள். இனியேனும் இப் போர்க்காதலை விட்டு மக்களுக்கு நலம்புரியும் வகையிலே இறங்குவீர்களாக! [அமர்கிறான]

**இளங்கோ:** (எழுந்து) ஆம் அண்ணா! நம் முன்னோரும் பலவகையினும் புகழ்பெற்ற வீரர்கள். அவர்கள் நமக்கு அறிவித்துள்ளதென்ன? "உறங்குவது போலுஞ் சாக்கா டுறங்கி—விழிப்பது போலும் பிறப்பு" என்பதை அறிவித்துள்ளனர். இளமையும் யாக்கையும் செல்வமும் நிலையற்றவை! புகழே நிலையுற்றது! புகழ்பெறப் போர்க்களம் ஒன்றே இடமாகாது. மக்களுக்கியற்றும் பணியும் இ

மாகும். போரிலே வெற்றியுங் கிடைக்கும். தோல்வி யுங் கிடைக்கும். ஏனெனில், போரிலே தந்நலமே முன்னிற்பது! மக்கட்பணியிலே பிறர் நலமே முன் னிற்பது! போரிற் புகழ்பெற்ற தாங்கள், குடிகள் நலத்திலும் புகழ் பெறுதல்வேண்டும். இதுவே என் வேண்டுகோள். [அமாகிறான்]

சாத்தனார்: (எழுந்து) அரசே! நான் மதுரை நகரத் தினன், பாண்டியனுக்குப் பரிந்து கூறுகிறேன் என எண்ணற்க! தன் முயற்சியாலே நாட்டைப் பெருக்கி ஆள்பவனே தூயவீரன். கொற்றவன் என்பது கொற்றத்தால—வெற்றியால்—வந்த பெயரேயாம் எனினும், ஒருமுவன் தனக்குக் கிடைத்த நிலத்தைப் பண்படுத்திப் பயிரிட்டுப் பயன்பெறாமல், நிலத் தைப் பரப்புவதிலே மட்டுங் கருத்தைச் செலுத்து தல் நன்றாகுமா? எனவே, போரிலே உள்ளத்தைப் போக்குதல் வேண்டா. மேலும், ஆரியரைத் தாக்குதல் போன்றதன்று, தமிழரைத் தாக்குதல்! ஒருடம்பிலுள்ள உறுப்புக்கள் ஒன்றோடொன்று போரிடுதல் போலவாகும். [அமாகிறார்]

செங்குட்: (சிந்தனையுடன்) அங்ஙனமாயின் எம் வீரம் இழிவுறுவதா?

அழும்பில்: (எழுந்து) மன்னித்தருள்க! தங்கள் வீரத்தை அவர்கள் அறிவார்கள். முன்னெப்போதாவது இவ்வாறியப்பியுள்ளனரா? ஆரியர் செருக்குடன் செப்பியதைச் சிந்தியாமலே உளறிவிட்டார்கள் பொறுப்பதுவே செய்யத்தகுவது

**செங்குட் :** இதைப்பற்றி நாளைக் கூறுகிறேம். எனினும், போருக்குரிய முயற்சியைக் கைவிடல் வேண்டா. கனகவிசயரைச் சிறையிலே வைத்திருப்பினும் அரசர்க்குரிய சிறப்புடன் வைத்திருங்கள். இனி அவை கலையலாம். [எழுந்து செல்கிருன்.]

---

## காட்சி 24

இடம் : வஞ்சியிலே அரண்மனையின் பின்புறமுள்ள பூம்பொழில்.

காலம் : முன் இரவு

[முழுநிலவு பால்போலப் பொழிகிறது. சேரன் செங்குட்டுவன் தனியே உலாவுகிருன்.]

**செங்குட் :** (தானே) 'செத்த பாம்பை யடித்தல் போன்றது!' 'இவ்வீரம் புதிது!' .. (சீற்றமெழ) என்ன இழிவுரை! தமிழனுக்குத் தமிழன் ஊட்டும் ஊக்கமா இது? பொருமைப் பேய்கள்! (நிற்கிருன்) வாய் காவாது மானத்தைப் பழிப்பதைப் பொறுப்பதா? நண்பர்களென்று நயமுடன் சென்ருற் புண்படப் பேசுவதா? செருக்குற்ற ஆரியர் செயலைச் சிந்தவிட்டதைப் போற்றுவார்களெனப் போனுற் சிந்தை வருந்தச் செப்புவதா? (உலாவுகிருன்) அவர்கள் கூறியதும் ஒருவகையிலே உண்மைதானே? நாமே நம் சினத்தாலே திரையிட்டுக்கொண்டோமோ செவ்விய அறத்துக்கு? ஆம், புறங்காட்டியவனைச் சிறைப்பிடிப்பது புன்மைதான்! (முகம்வாடி) வெற்றி மயக்கத்திலே மதியை

யிழந்தோம்! உண்மையாகவே கனகவிசயரை விட்டிருக்கவேண்டும். (நின்று) பின் நமது வஞ்சினம்? (உலாவுகிறான்) அவர்கள் போருக்கு வராமலே திறை கொடுத்துப் பணிந்திருந்தால்—அல்லது போரிலே இறந்துவிட்டிருந்தால்—அப்போது வஞ்சினம் முடியுமா? கல்லைத் தலைமேலே சுமத்த இயலுமா? வீரத்துடன் எதிர்நின்று பொருதாலன்றோ வஞ்சினம் செல்லும்? (நின்று) எனினும், இவர்களா நம் வீரத்தைப் பழிப்பது? (உலாவுகிறான) குற்றமிருந்தாற் குத்திக்காட்டல் எவர்க்கும் ஏற்றதுதானே? அது குற்றமாகுமா? குற்றத்தை ஒத்துக்கொள்ளாமையன்றோ குற்றம்? நாளைக்கே அவர்களைச் சிறையினின்று விடுதலை செய்யவேண்டும். நம் பிழையையெடுத்துக்காட்டிய சோழ பாண்டியர்களுக்கு நம் நன்றியைத் தெரிவித்தல் வேண்டும்.

[ஒரு பெணகுரல கேடகிறது. நின்று உற்றுக கேடகிறான் அபபெண் அறியாமலிருக்க அருகிலிருநத செடிமறைவிலே மறைகிறான ]

அரபெண · (தானே) உள்ளமே! எட்டாப் பழத்திற்குக் கொட்டாவி விடாதே. அங்கு வீரததையும் அழகையும் கண்டாய். இங்கே வளவிய செல்வத்தைக் கணடாய். எவ்வகையிலும் ஏற்றததையே கண்டாய்! விளக்கிலே விழும் விட்டிலைப்போல—சண்பக மலரிலே தேனை விரும்பிச் சிக்கிய தேனீயைப்போல —அழகுடைய வீறிலே மயங்கிவிட்டாய்! ஆரியாங் கனையே! நீயும் அரசகுமாரிதான்! அரசனைததான் காதலிக்கிறாய்! எனினும், ஒருதலைக் காதலாக முடிந்தால் என்ன செய்வாய? பெண் குலத்திற்கே தகாத

—பெண்குலமே துணியாத—வகையிலே செங்குட்டுவரைக் காதலித்தாய்! பகைவரைக் காதலித்தாய்! இதைப் படுகுழியென்றுதானே சொல்லவேண்டும்? (உலாவுகிறாள்) அன்று கங்கைக் கரையிலே நாட்டியமாடியபோது அவர் கண்களுடன் உன் கண்கள் உறவாடின. ஆனால், அந்த உறவு என்ன உறவோ? அழகை மகிழ்ந்து நோக்கினாரோ? மயங்கி நோக்கினாரோ? மகிழ்ந்து நோக்குதலும் இயல்பேயன்றோ? அப்போது நீ நாட்டியப் பெண்ணாக அங்கே அமர இடம் பெற்றாய். பல நாட்களாக வளர்ந்த காதல் நாற்றை நட இடம் பெறலாமென்று நம்பினை போலும்! இங்கே அழகின் கனியாக, உயிராக, ஒளியாக ஒப்பற்ற அறிவு, பண்புறு ஓவியமாக வேண்மாளைக் கண்டாய்! அவளைக் கண்டு காதலிக்கும் உள்ளம், அவளைத் தீட்டிய திரை, அவள் மலர்ந்த பொய்கை, அவள் தழுவிய கொள் கொம்பு உன்னை ஏற்குமா? (கண்ணீர் வார) தமயன்மார்களைச் சிறைப்பிடித்த பகைவரைக் காதலித்துப் பயன்பெறாமல் உயிர்வாழ்வதா? அவர் உன்னை விரும்பாவிட்டால்—விரும்புவதற்கென்ன அடையாள மிருக்கிறது?—காதல் பயன் பெறாமற் போனால்—உயிருடனிருப்பது நன்றோ? அப்போது உயிர் விடுவதைவிட இப்போதே உயிர் விடுவது மேல். நம் காதல் நம் உள்ளத்திலேயே புதைபடும்! பலரறியப் பரவி வசையை விளைவிக்காது. ஆம், இதுவே நலம். (விம்மி விம்மி அழுகிறாள்) உத்தர நாட்டிலே ஆரிய மரபிலே பிறந்தேன். 'பகைவரைக் காதலித்தேன்! நாட்டியக் காரியாக நடித்தேன். நான் கற்ற நாட்டியக் கலை

யையும் மரபின் மானத்தையும் வீணே காற்றிற் பறக்கவிட்டு, எவரும் அறியாமல் இறக்கிறேன்! அவ்வாறு இறந்தாலன்றி என் மானம் காக்கப் பெறாது! (கையிலே ஒரு சுரிகையை இடையிலிருந்து எடுக்கிறாள்) சுரிகையே! நீயே என் உண்மைத் தோழி! உன்னையன்றி என் உள்ளத்திலூறிய காதலை ஒருவரும் அறியலாகாது!

[ஓங்குகிறாள் சேரன் செங்குட்டுவன் செடி மறைவிலிருந்து விரைந்து வந்து அவள் கையைப் பற்றிச் சுரிகையைப் பிடுங்கி யெறிகிறான் அவள் நினைவிழக்கிறாள், அவள் விழுமுன் தன் கையிலே தாங்குகிறான், கீழே அமர்ந்து தன் மடியிலே விடுகிறான், மெல்ல மேலாடையால் விசிறுகிறான் அவள் விழிக்கிறாள்]

**செங்குட்.** தற்கொலை கொடிது! அதனினும், ஒருவருடைய பாதுகாப்பை வேண்டிப் பெற்று, உடன் வந்து, அவரறியாமல் அவருக்குப் பழியை விளைவிப்பது கொடியது! கொடி போன்ற உன்னுள்ளத்திலே கொடிய செயலைத்தான் எதிர்பார்க்க முடியும் போலும்!

**ஆரியாங்கனை** (எழுந்து நாணத்துடன் ஒரு புறம் நின்று) தாங்கள் எங்கிருந்தீர்கள்?

**செங்குட்** (எழுந்து) வஞ்சியினிடத்தில் இருந்தேன், இருக்கிறேன்.

**ஆரியாங்.** (திகைத்து) தங்கள் மொழி இருபொருள் படுகிறதே! எந்த வஞ்சியினிடத்தில்?

**செங்குட்.** (நகைத்து) எனக்குரிய வஞ்சியினிடத்திலே தான்.

ஆரியமாலா : (விளங்காமல்) இன்னும் விளங்கவில்லை. எனினும், அதைப் பற்றிப் பேச்சு வேண்டாம். என்னை ஏன் தடுத்தீர்கள்?

செங்குட் : அதைத் தான் கூறிவிட்டேனே! நீ தானே அன்று கங்கைக் கரையிலே ஆடியவள்?

ஆரியமாலா : ஆம், அதுவும் நினைவிலேயிருக்கிறதா?

செங்குட் : ஏன் அவ்வாறு இயம்புகிறாய்? நானென்ன உணர்வற்ற உருண்டையா? அந்த அழகிய நடன ஓவியம் என் உள்ளத்திலே மேலும் பதிந்துவிடாதா! அப்போது நீ என் அரண்மனை நாட்டியப் பெண்ணாகப் பதிவு செய்துகொண்டாய். இங்கு வந்த பின் என்னை யறியாமலே உயிர்விடுவது என் ஆட்சிக் குறைவென்பதை அறியவில்லையே!

ஆரியமாலா : (சிந்தனையுடன்) அங்ஙனமானால், நான் கூறிக் கொண்டிருந்தவைகளை யெல்லாம் கேட்டிருந்தீர்களோ?

செங்குட் : ஆம்

ஆரியமாலா : (முகத்தைத் தாழ்த்தி) ஒரு பெண் தனியே நின்று தனக்குத்தானே பேசிக்கொண்டிருக்கும் மறையை மறைந்திருந்து கேட்டல் மன்னர்க்கு அறமோ?

செங்குட் : (நகைத்து) அதுதானே என்வேலை? என் ஆட்சியிலிருக்கும் ஓருயிர்—ஒரு சிறந்த நாட்டியக் கலையின் உயிர்—இறப்பதைத் தடுப்பது அதனாலே தானே — மறைந்திருந்து கேட்டதனாலேதானே இயன்றது?

ஆரியமாலா : போகட்டும், அரசர் குடிகளின் நலத்தைக் கருதுதல் மரபுதானே?

செங்குட். ஆம், அதிலென்ன ஐயம் ?

ஆரியாங் : என் நலத்தைக் கருதியிருந்தால் தடுத்திருப்பீர்களா ? நான் இறந்திருந்தால் என்னைப்பற்றி ஒருவரும்—தங்களைத் தவிர—அறியாமல் என் உள்ளம் சாந்தியடைந்திருக்கும்.

செங்குட். தற்கொலை கொடியதென்று முன்பே மொழிந்தேனே !

ஆரியாங் : தாங்கள் கொடியதென்கிறீர்கள், எனக்கு நலமென்றே தெரிகிறது.

செங்குட் : எங்ஙனம் நலமாகும்? அச் சுரிகை உன் நெஞ்சிலே பதிந்திருந்தால் எனக் கன்றோ கெடுதி ?

ஆரியாங் (வியப்புடன்) எங்ஙனம் !

செங்குட் உன் நெஞ்சிலே என்னை . .

ஆரியாங் . (நாணத்துடன்) வைத்து வழிபட்டுவருகின்றேன்

செங்குட் : அச் சுரிகையின் முனை என்னைப் பிளந்திருக்கும் ?

ஆரியாங் (ஐயத்துடன்) என் உள்ளத்திலேவைத்து நான் வழிபட்டால் மட்டும் போதுமா ? தாங்கள் வந்து குடியிருந்தா லன்றோ ? இதோ இந்த முழு நிலவின் தண்மையிலே நாம மயங்குகிறோம். அதனை விரும்புகிறோம், எனினும், அது நம்மை விரும்புதலுண்டோ ? தங்கள் பேரழகிலே வெற்றியிலே மயங்கிய மங்கை நான். தங்களை நினைந்து நினைந்து வாடினேன் இதுவரையில். எனினும், தாங்கள் விரும்புவீர்களென்று எதிர்பார்ப்பதெப்படி ? இருவர் உளமும் ஒன்றுபட்டாலன்றோ காதல்கைகூடும் ?

செங்குட்: (புன்முறுவலுடன்) உண்மைக்காதலை விரும்பி ஏற்காத உள்ளமுடையேனல்லேன்.

ஆரியமா: (மகிழ்வும் நாணமுந் தோன்ற) உண்மையாகவா?

செங்குட்: (அவள் கைகளைப் பற்றி) வஞ்சியேன் வஞ்சியேன்.

ஆரியமா: (தலைகுனிந்தவாறு) இன்னும் என்னைத் திகைக்கச் செய்கிறீர்கள். முதலிலும் வஞ்சியினிடத்தில் உள்ளேன் என்றீர்கள். இப்போது வஞ்சியேன் வஞ்சியேன் என்கிறீர்கள்.

செங்குட்: முதலிற்கூறிய வஞ்சியை நகரமென்று நினைத்துக்கொண்டாய் போலும்.

ஆரியமா: ஆம்.

செங்குட்: அன்று, பெண் என்றே நினைத்துக் கூறினேன். அப்பெண்ணும் நீயே உன்னாற் கவரப்பெற்றேன் என்று அப்போதே கூறிவிட்டேன்.

ஆரியமா: (மகிழ்வுடன்) உம். பெண்ணறிவென்பது பெரும் பேதைமைத்தே! அப்புறம்?

செங்குட்: இப்போதும் 'நான் வஞ்சி நகரத்தான், யாரையும் வஞ்சிக்கும் இயல்புடையேனல்லேன்' என்றே கூறினேன். விளங்குகிறதா?

ஆரியமா: விளங்குகிறது!

செங்குட்: என்ன விளங்குகிறது?

ஆரியமா: என் தமையன்மாரைச் சிறைப்படுத்தியதோடு என்னையும் சிறைப்படுத்திவிட்டீர்கள் என்று!

சேரகுட் : உன் தமையன்மார் சிறையிலிருந்து விடுபடுவார்கள்! ஆனால், நீ மட்டும் விடுபடமாட்டாய். எனினும் .

ஆரியமாலா (மகிழ்வுடன்) எனினும் என்ன? என் இரு விருப்பமும் நிறைவேறச் செய்தீர்கள். வேறொன்றும் விரும்பவில்லையே நான்?

சேரகுட் : நாம் 'இருவரும் மாறிப்புக்கிதயமெய்திஞேம்' எனினும் .

ஆரியமாலா (புன்முறுவலுடன்) ஓ! விளங்குகிறது! தங்கள் பட்டத்தரசியார்க்கு அஞ்சுகிறீர்கள்.

சேரகுட் : ஆம், அவள் என் உள்ளத்திலே முன்பே குடிகொண்டவள். அவளேதான் உன்னையும் என் உள்ளத்திலே இருத்த ஒப்புக்கொள்ளுதல் வேண்டும்; தன் இருக்கையிலே இடம் பகிர்ந்தளித்தல் வேண்டும்.

ஆரியமாலா அடியாள் விரும்புவது தங்கள் காதலை மட்டுமே, பட்டத்தரசியாரிடம் பங்கன்று. அந்தக் கோப்பெருந்தேவியாரின் பணிப்பெண்ணுகவே அமர்ந்திருப்பேன். வேறெந்த உரிமையும் வேண்டேன்.

சேரகுட் : (அன்புடன் தழுவி) ஆ! நான் உன்னை நாட்டியக்கலை, அழகுக்கலை என்றுமட்டுந்தான் நினைத்தேன். இப்போது அறிவுக்கலையென்றும் அறிகிறேன். அரச குடும்பத்திலே பிறந்து அரசியாக விரும்பாமல் அயல்நாட்டு அரசனிடம்—பகைவனுக இருந்த அரசனிடம்—காதற்பிச்சை வேண்டுகிருய்.

(கண்ணீர்வார) காதலுக்காக உன் உரிமையை விட்டுக்கொடுத்த உன்னை எங்ஙனம் புகழ்வேன்! இனி உன்னைக் கைவிடேன் காதல் வாழ்க!

---

## காட்சி 25

இடம்: வஞ்சியில் அரண்மனையைச் சார்ந்த ஒரு விடுதி

காலம்: காலை

[கனகனும் விசயனும் உரையாடுகிறார்கள். இருவரும் தனித்தனியே கட்டில்களில் அமர்ந்துள்ளனர்.]

**கனகன்:** (பெருமூச்சுவிட்டு) போதுமப்பா தமிழனைப் பழித்தது? உயிருடன் பிடித்து நடைப்பிணமாக்கிக் கல்லைச் சுமக்கும் கவின் புரவியாக்கி, மானத்தின் அடையாளமும் சிறிதுமில்லாத கோதாக்கிவிட்டது! வாய்காவாது கூறிய மொழி நம்மைச் சுட்டுக் கரியாக்கிவிட்டது! வாய்மொழி தலைச்சுமையாயிற்று! விரலுக்குத்தகாத வீக்கமாயிற்று!

**விசயன்:** தலையை நெரித்துவிட்டதப்பா அப்பேச்சு! சோழனையும் பாண்டியனையும் போய்ச் சேவிக்கச் செய்துவிட்டது! மதிப்பை மடித்த மறலியாயிற்று! இப்போதும் கூத்தாடிக் கொம்மாளமிட்டு நகைக்கிறது!. ஒவ்வொரு வகையிலுந் தமிழன் மேம்பட்டிருக்கிறான்! வீரத்தில் மேம்பாடு! வலிமையிலே மேம்பாடு! சிறைப்பட்டவரை நடத்தும் முறையிலும் மேம்பாடு! நமக்குரிய அரண்மனை

யிலே நலமுடன் வாழ்வதைப்போல நலமெல்லாம் மாண்புற அமைத்துள்ளான் உண்ண, உறங்க, உலாவ, உடுக்க எவ்வகையிலும் அரச வரிசையே அமைத்துள்ளான் அவனைப்போலவே அவன் படைத்தலைவனும் விறலுடன் சிறந்த செயலுடன் காட்சியளிக்கிறான். 'பசித்துப் பிணைமுயலும் யானை போல' அயர்வில்லாது போர் புரிகிறான்! அறப்போர்! சிறப்புறு சூழ்ச்சி! எப்படிப் புகழ்வது?

**கனகன்:** அன்று ஆரியர் நிலமிசைச் சிறந்தனர். இன்று தமிழர் தகுதி பெற்றுவிட்டனர். வாழ்ந்த ஆரியர் தாழ்ந்துவிட்டனர். (ஒரு காவலன் வருகிறான்) வா அப்பா! என்ன?

**காவலன்.** (வணங்கி) எங்களரசர் தங்களைக் காண வருகின்றனர். படைத்தலைவரும் உடன்வருகிறார் தங்களுக்கு அறிவிக்க ஆணை பிறந்தது.

**கனகன்:** (முகம் வாடி) என்னவோ? உம் (பெருமூச்சு விடுகிறான்) நன்று. காத்திருப்பதாகக் கூறு உங்கள் காவலரிடம்.

[காவலன் புன்முறுவலுடன் வணங்கிச் செல்கிறான்]

**விசயன்:** நம் ஊழ்வினை எப்படியுள்ளதோ?

**கனகன்** இப்போதுள்ள நிலையினும் இழிவாக ஏதும் வராது.

[செங்குட்டுவனும் வில்லவன்கோதையும் வருகின்றனர், இவர்கள் இருவரும் எழுகிறார்கள்]

**செங்கு:** ஏன் எழுகிறீர்கள்? அமருங்கள். (செங்குட்டுவன் முதலில் அமர்கிறான் பிறகு, அவர்கள் அமர

கிறார்கள்) வில்லவ! நீயும் அமர்க! (அவனும் அமர்கிறான். யாவரும் சிறிதுபோது பேசாமல் இருக்கின்றனர்) அன்பர்களே! உங்கள் அரண்மனைபோல யாவும் வேண்டியாங்குக் கிடைக்கின்றனவா?

**கனகன் :** எங்கள் அரண்மனையைவிட எல்லாம் காலத்திற் கிடைக்கின்றன. ஆனால், . . .

**செங்குட.** (புன்முறுவலுடன்) உரிமையில்லை யென்கிறீர்கள்!

**கனகன்** (நிலத்தை நோக்கிய வண்ணம்) ஆம்.

**செங்குட.** (வாடிய முகத்துடன்) அவ்வாறு நேர்ந்ததற்காக வருந்துகிறேன். உறங்கும் புலியைத் தட்டியெழுப்பினீர்கள்! கல்லைக் குத்திக் கை நொந்தீர்கள்! இனி நடந்ததை மறந்துவிடுவோம். என்னிடமடைந்த தோல்வி இழிவாகாது!

**விசயன்** (வெதும்பிய உள்ளத்துடன்) நஞ்சு யாவர் கொடுப்பினும் கொடியதே! ஆழியணிந்திட்ட கையாற் குட்டினால் வலியிராதா?.. ... நடந்ததை மறந்துவிடுவோம் என்றீர்கள்,

**செங்குட.** ஆம். சென்றதை நினைந்து வருந்துதலாற் பயனென்ன?

**விசயன்** சென்றதை நினைந்து வருந்தாமை மட்டுமன்று, இனி வருவதை நினைந்தும் வருந்தோம் நாங்கள்.

**செங்குட்.** ஏன்?

**விசயன்** வருந்துவதாலோ முன்னெச்சரிக்கையுடனிருப்பதாலோ வரும் நலமேதுமில்லை. உரிமை

யில்லாதவனுக்கு உள்ளம் இருந்தாலும் உளுத்துப் போயிருக்கும்! எண்ணம் இருந்தாலும் இடிகரையா யிருக்கும்! வாயிருந்தாலும் வழியிராது பேச! ஊமையினும் ஊமையாவான்! மேலும், மான மிழந்துபோன பிறகு வாழ்வின்மேல் காதல் பிறக்குமா? இனி, நீங்கள் ஏது செயயினுமென்ன? ஏற்று நடப்போம். பிச்சையிரந்து பிழைப்போம்

செங்கு. (முகம வாடி) வாழவின்மேல் இவ்வளவு வெறுப்புத் தட்டுவானேன்? வாழ்வுந் தாழ்வும் பகலும் இரவுமாகுமல்லவோ? நடைபெற்றவற்றை நானே வெறுக்கிறேன். போரிலே வெற்றியுந் தோல்வியும் வருவது இயல்பே. வென்றவர் களிப்பதும் தோற்றவர் வருந்துதலும் இயல்பே. இனி, நீங்கள் முன்போல உங்கள் நாட்டையடைந்து உரிமையுடன் ஆள விடுதலை செயகிறேன். அதுமட்டு மன்று, உங்களுடன் உறவு கொள்ளவும் உள்ளங் கொள்கிறேன்.

கனகன்: (மகிழந்து) உண்மையாகவே எங்கள் உரிமையைப் பெறுவோமா?

செங்குட்: (புன்முறுவலுடன) செங்குட்டுவன் விளையாட்டிலும் பொய்யுரையான்.

விசயன்: உறவு கொள்வதெங்ஙனம்?

செங்கு. உங்களுககு உழுவலன்புடைய தங்கை யொருத்தி யுண்டென அறிகிறேன்.

கனகன்: ஆம்

செங்குட: அவளை நான் மணந்துகொள்கிறேன்.

**விஜயன்** : எங்கள் உறவுக்காக அவளைக் காணிக்கை கேட்கிறீர்களா? அவள் விருப்பின்றி ஒருப்படோம். இச்சிறை வாழ்வே இனிமையென ஏற்போம்.

**செங்குட** : அவள் விருப்பத்தையறிந்தே கூறுகிறேன். அழகும் அறிவும் கலையும் உடைய ஆரணங்காகிய அவளை நானும் விரும்புகிறேன். எங்கள் மனமொத்த காதலாலே நம் உறவுப்பயிரை வளர்ப்போம்.

**கனகன்** : (முகமலர்ச்சியுடன்) நன்று. அங்ஙனமாயின், தங்கள் நட்பையும் உறவையும் தடையின்றி யேற்கிறோம்.

**செங்குட** : (மகிழ்வுடன் வில்லவன்கோதையை நோக்கி) இவர்களை அழைத்துச்சென்று நம் நகர்க்கு வெளியேயுள்ள 'வேளாவிக்கோ மாளிகை'யிலே இருக்க வகை செய்து தருக! பணியாட்களும் பல்வகைப் பொருளும் அமைத்திடுக!

**வில்லவன்** : (மகிழ்வுடன்) அரசர்பிரான் ஆணைப்படி நடப்பேன்.

**செங்குடு** : ஆரிய அரசர்களே! தங்கள் சம்மதத்தினாலே இரு அரச குடும்பங்கள்—இருவேறு வகையான நாகரிகமுள்ள குடும்பங்கள்—ஒன்றுபடுகின்றன. இனி நடைபெறும் கண்ணகியம்மையின் சிலைநாட்டு விழாவுக்கு இருந்து செல்லுங்கள். பலநாட்டு மன்னர்களும் வருவார்கள். இலங்கைக் கயவாகு மன்னரும், குடநாட்டுக் கொங்கிளங்கோசரும், சோழநாட்டுப் பெருங்கிள்ளியும், பாண்டியநாட்டு வெற்றி

வேற் செழியனும், மாளுவ வேந்தரும் வருவதாக அறிவித்துள்ளனர்.

**கனகன் :** தங்கள் விருப்பப்படி நடக்கிறோம்.

**செங்குட் :** நன்று. தாங்கள் வேளாவிக்கோ மாளிகைக்குச் செல்லலாம். படைத்தலைவருடன் சென்றிருக்க வேண்டுகிறேன். [செல்கிறான்]

---

## காட்சி 26

இடம் வஞ்சியில் அரசவை
காலம் பிற்பகல்.

[செங்குட்டுவன் வேண்மாளுடன் அரியணையில் வீற்றிருக்கின்றான். இளங்கோவடிகள், சாத்தனார், மாடலன், அழும்பில்வேள், வில்லவன்கோதை, நகரப்பெருமக்கள், கனகவிசயர், ஆரியாஙகனை முதலானோர் தத்தமக்குரிய இருக்கைகளில் இருக்கின்றனர். சாக்கைக்கூத்தன் ஒருவன் சிவபெருமான் கூத்தாகிய கொடுகொட்டியை நடிக்கின்றான். நடனமுடிவிலே பரிசு பெற்றுச் செல்கின்றான்.]

**செங்குட் :** (எழுந்து) பேரவைப் பெரியோர்களே! இன்று நாம் கூடியது நம் படைத்தலைவர் வில்லவன் கோதையைப் பாராட்டுதற்காகவே. வீரமே வில்லவன்கோதையின் உருவம். போர்த்திறனே வில்லவன்கோதையின் செயல். எனவே, வில்லவன் கோதைக்கு நம் பாராட்டுச் சிறிதும் உயர்வுநவிற்சியாகாது. அதுமட்டுமன்று. அவர் தகுதிக்கேற்ற

சிறப்புமாகாது. எம்மிடம் சேவை செய்கிறுரென் பதற்காக ஏதோ பரிசு கொடுக்க முன்வந்தோமே யன்றிக் கைம்மாறு காட்டும் கருத்தோடு வரவில்லே. இவர் வெற்றி எமக்குத் தந்ததன்று, இந்த நாட்டுக்கு அளித்தது இந்த நாடு என்பது வஞ்சி நாடு மட்டு மன்று, தமிழ்நாடு முழுமையுங் குறிக்கிறது. ஆகவே, இந்த வைரவாளே இந்தத் தமிழ்நாட்டின் சார்பாக அளிக்கிறேம்.

[செங்குட்டுவன வைரவாளே அளிக்கிருன். விலலவன் கோதை பணிநது வாஙகுகிருன் ]

எல்லோருமு : செங்குட்டுவர் வாழ்க! வில்லவன்கோதை வாழ்க!

செஙகுட். இந்த வாள் வைரமாக இருப்பதுபோலவே இவருளளமும் போர்முனேயிலே வைரம் பாய்வ தாக! அரசன் கையிலே செங்கோல் போல—அவன் செவ்விய ஆட்சியைத் தெரிவிப்பதுபோல—இவர் கையிலும் இவர் உள்ள உறுதியை விளக்க இவ் வாள் ஒளிர்வதாக! [அமர்கிருன்.]

விலலவன் : (அவையை வணஙகி) அவைப்பெரியோர்களே! வஞ்சியரது பகைவரைத் தாக்கும் நம் வஞ்சியார் தலேவர்—நம் அரசர் பெருமாஞர்—எனக்களித்த இந்த வாளேத் தாங்கும் ஆற்றல் உடையேனுஞலும் அவர்கள் கூறிய புகழுரைகளேத் தாங்கும் ஆற்றலி லேன். நான் ஏதாவது சிறு வெற்றியை விளேத்தி ருபபேனுஞல் அவ்வெற்றியும் அரசர் பெருமாஞர் தலேமையினுலே விளேந்தது என்பதைப் பணிவுடன் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன். கதிரவன் ஒளியாலே நம் கண் ஒளி தருவதுபோல நம் வேந்

தர் ஆற்றலாலேதான் என் ஆற்றல் விளங்குகிறது. பூவோடு கூடிய நாரும் மணம் பெறுதல்போல அடியேனும் ஆயினேன். அரசர் பெருமானாரும் நீங்களும் எளியேற்குச் செய்த இச்சிறப்புக்கு மிகவும் பணிவுடன் நன்றி தெரிவிக்கிறேன்.

[அமாகிறான் காவலன் வருகிறான்]

**காவலன் :** (வணங்கி) அரசர் வாழ்க! யாரோ மூன்று மாதர்கள் கண்ணகியம்மையைத் தெரிந்தவர்களாம்—தங்களைக் காண வந்துள்ளனர்.

**செங்குட் :** (மகிழ்வுடன) நன்று! அழைத்து வருக! (காவலன் வணங்கிச் செலகிறான்) எங்கேயோ பிறந்தாள்! எங்கேயோ தன் கற்பின் திறனைக் காட்டினாள்! இங்கே நம்மால் வணங்கத்தகும் வான்மணியாயினாள் கண்ணகி.

[மூன்று மங்கையா வருகிறார்கள் அரசனை வணங்குகிறார்கள]

**செங்குட் :** அழகிய மங்கையரே! நீங்கள் கண்ணகியம்மை யார்க்கு எவ்வகை உறவுடையீர்கள்?

**ஒருத்தி :** (வணக்கததுடன் கண்ணீா ததும்ப) சேரர் தலைவரே! மூன்று முடிமன்னராலும் காக்கப்பெறும் இமயத்திற் பிறந்து, தூய கங்கையிலே நீராடி, இங்கு வந்த கற்புத் தெயவத்தின்—குடமலையாட்டியின்—தோழி நான். சோணாட்டார் பாவைக்குத் தோழி நான்! என் பெயர் தேவந்தி.

**மற்றொருத்தி :** (வணககததுடன்) மடமங்கையாகிய மாதவியைப் போலன்றிக் கடமையைப் பூண்டு கணவன் கையைப்பற்றிக் கொடுங்காட்டின் வழியே வந்த

அழகிய குடங்கைக் கண்ணுளாகிய கண்ணகியம்மை யின் செவிலித்தாய் நான்.

[கண்ணீரவார விம்முகிறாள்.]

**மூன்றாவது மாது:** (வணக்கத்துடன) அடியேனுக்கும் பெற்ற வருக்கும் வேறு எவர்க்கும் அறிவியாமலே கற்பா கிய கடமையைப் பூணடு, காதலன்பின் வந்த கண்ணகியம்மையின் அடித்தோழி நான்! புகார் அணங்கின் பணிப்பெண்ணே நான். [அழுகிறாள]

**செங்குட் :** (கண் கலஙக) கண்ணகியம்மையின் நிலை யறிந்து, இவ்வளவு தொலைவுவந்த உங்கள் அன்பு டைமைக்கு வியப்படைகிறேன். நீங்கள் மூவரும் கணணகியம்மையின் திருவிழாவரையில் அரண மனையிலேயே இருப்பீர்களாக!

**வேண்மாள் :** (பெருகிவருங கண்ணீரைத் துடைத்துக் கொண்டு) அம்மையர்களே! அரசராணைப்படி என் னுடன் நீங்கள் எக்குறையுமின்றியிருப்பீர்களாக! நாம் தொழுந் தெய்வமான கண்ணகியின் உறவின ரைக் காணும் பேறு பெற்றதற்கு மகிழ்கிறேன்.

**தேவந்தி :** (பணிவுடன்) நன்று.

---

## காட்சி 27

இடம்: வஞ்சியிலே கண்ணகியின் கோயில்.

காலம்: காலை.

[தோரணங்களாலும் பலவகை மலர் மாலைகளாலும் அணி செய்யப்பெற்ற கண்ணகியின் கோயில்— உட்புறம் விளக்குகள் ஒளிரக் கண்ணகியின் படிவம் நவமணிமாலைகளாலும் பூந்தொடைகளாலும் பொன்னுடையாலும் புனையப் பெற்றிருக்கின்றது. ஒருபுறம் சேரன் செங்குட்டுவன், இளங்கோவடிகள், சீத்தலைச் சாத்தனார், மாடலன், இலங்கைக் கயவாகு, கொங்கிளங்கோசர், வெற்றிவேற்செழியன், பெருங்கிள்ளி, மாளுவமன்னர், நூற்றுவர்கன்னர், கனகவிசயர், நாட்டுப் பெருங்குடி மக்களும், ஒருபுறம் வேண்மாள், ஆரியாங்கனை, தேவந்தி, கண்ணகியின் செவிலித்தாய், பணிப்பெண், ஐயை, வஞ்சிமகளிரும் ஆக நிற்கின்றனர் ]

செங்குட். பெரியோர்களே! துறவிகள், புலவர்கள், அரசர்கள் போன்றவர்களையும் மற்றோரையும் இங்குப் பிணித்துவைத்த கண்ணகி ஒரு வணிகப்பெண்ணே. அந்த அம்மைக்காகவே நாம் கூடியிருக்கிறோம் என்பதை எண்ணும்போது எம்முள்ளம் மகிழ்ச்சியும் வியப்பும் அடைகிறது. உண்மையில் நாம் அந்த வணிக மாதுக்காகக் கூடியுள்ளோமா? இல்லை. கற்பின் வெற்றியைக் கைதொழவே கூடியுள்ளோம். செயற்கரிய செய்த பாவையென்றே சேவிக்கக் கூடியுள்ளோம். பொதுமக்களேயன்றிக் கற்றறிந்தவர்களெல்லாருங் கைதொழுங் காரிகை

யாயினள் கண்ணகியன்னை ! அவள் புகழ் வாழ்க! இவ்வாறு நம்மால் வழிபடும் பேறுபெற்ற குடமலைத் தெய்வமான கண்ணகியை நம் சார்பாக, அரசி வேண்மாள் வழிபடுவாள். நீங்களெல்லீரும் உங்களுள்ளத்திலே கண்ணகியின் ஓவியத்தை நிறுத்தி வழிபட்டு நாட்டிற்கு நலம்விளைக்க வேண்டுவீர்களாக!

எல்லோரும் : நன்று, நன்று! கண்ணகி வாழ்க! பத்தினிக் கடவுள் வாழ்க! 'குடமலைத் தெய்வம்' வாழ்க!

[மங்கலக் கருவிகள் முழங்குகின்றன. வேண்மாள் கண்ணகியின் சிலையருகிற் சென்று, அதன் மேலிருந்த அணிகளையும் மலர்களையும் அகற்றி, அருகில் நிறைகுடங்களிலிருந்த நறுமணநீரை இரு கைகளாலும் எடுத்து வார்க்கிறாள். அணிகளையும் மலர்மாலைகளையும் ஆடையையும் புனைகிறாள்.]

வேண்மாள் : கடவுள் நங்கையே, கற்புக்கடம் பூண்ட உன்னையல்லது பொற்புடைத் தெய்வம் யாங் கண்டிலம். கண்ணகித் தெய்வமே! பிறந்து வாழ்ந்த இடம் பூம்புகார்! சோழநாடு! உன் கற்பின் வெற்றியை உலகுக்குக் காட்டிய இடம் மதுரை! பாண்டியநாடு! கோயில்கொண்டு வழிபாடு பெறுமிடம் வஞ்சி! சேரநாடு! ஆரிய மன்னர் அணிமுடிமேலும் ஒளிர்ந்தாய்! இவ்வாறு தமிழ்நாடேயன்றி ஆரிய நாட்டினும் உன்புகழ் பரவியது! இலங்கை மன்னரும் வந்து வணங்கி நிற்கிறார். எனவே, "ஒரு மாமணியா யுலகிற் கோங்கிய திரு மாமணி" யாயினை! கற்புக் கடவுளே! எம் அன்புடன் கலந்த வழிபாட்டை யேற்பையாக! மாதர்களின் அறத்தை மாண்புறக் காப்பையாக! நாட்டைப் பிணி முதலி

யன இன்றிக் காத்தருள்வையாக! நாங்கள் ஆட்டும் இந்த நறுமணநீர் தூய அன்புநீர்! உள்ளத்திலிருந் தூறும் இன்பவூற்று! இது நின் உள்ளத்தைக் குளிர்விக்குமாக! அணிந்த மலர்கள் அன்பு மலர் கள்! அணிந்த அணி அன்பின் அணி! அணிந்த துகில் அன்புத் துகில். ஏற்றருள்க!

[நறுமணப் புகை யூட்டுகிறாள்]

**தேவந்தி:** (கண்ணீர் வார) என் ஆருயிர்த் தோழி! கண் ணகியன்னையே! நீ கண்ட தீக் கனவைச் செப்பிய போது—நானும் என் கணவனும் ஒரு பெரு நகருட் பட்டோம். அங்கே சிலர் இடுதேளிட்டுப் பழி யொன்றுரைத்தார் எங்கள்மேல். அதனால், கோவல னுக்குத் தீங்குற்றது. நான் காவலன்முன் சென்று கட்டுரைத்தேன். அதனால், அரசர்க்கும் ஊர்க்குந் தீங்குற்றது. பிறகு, நாங்களுற்ற நற்றிறங் கேட்கின் நகையாகும் என்று கூறியபோது—தவமிலாத நான் உணராதொழிந்தேன். நீ கூறாமல் மறைத்த ஊருற்ற தீங்கும் நீங்களுற்ற நற்றிறமும் நானிலம் அறிந்தவைகளாயின! நீ கண்ட கனவு கைமேற் பலித்தது! உன் நிலை கேட்ட உன் அன்னையும் மாமியும் ஆற்றாமல் உயிர்விட்டதை உணர்வையோ? அந்தோ! ஆருயிர்த் தோழியான நான்மட்டும் உயிர் சுமந்துவந்து நடைப்பிணமாக உன் திருமுன் நிற் கிறேன். நீ கனவைக் கூறியபோது, அதன் தீமை யகலத் தெய்வவழிபாடு செய்யவேண்டுமென்ற நான் இப்போது உன்னை வழிபட்டு நிற்கிறேன். என் தோழமையை நினைந்து வழிபாட்டை யேற் பையோ? [எல்லோருங் கண்ணீர் விடுதல்]

**செவிலித்தாய்** (கண்ணீர் வடிய) என் அருமைக் கிளியே! கூட்டிலே குதலைமொழி கற்பித்துக் கொஞ்சிக் கொஞ்சிப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்தேன். கூட்டைப் பிரித்துக் கொடிய வினை உன்னை என்னை விட்டுப் பிரித்துக்கொண்டு சென்றதே! இந்தக் கைகள் உன்னை வளர்த்த கைகள். தழுவியெடுத்துச் சுமந்து மகிழ்ந்த கைகள்! இந்த வாய் உன்னை முத்தமிட்டுக் குதலைமொழி கற்பித்து மகிழ்ந்த வாய்! இந்தக் கண்கள் உன்னைக்கண்டு உன் விளையாட்டையும் உன் இல்லறச்சிறப்பையுங் கண்டு களித்த கண்கள்! அந்தோ! நீ இன்னலுறும்போது இவை உன்னைக் காணமல் மரம்போலிருந்தன! எனினும், அவற்றை இன்னுஞ்சுமந்து வாழ்கிறேன். உலகின் ஒளியாகிய உன்னை வழிபடும் இந்த அன்புக் குழுவிலே நிற்கத் தகுதியற்றவள் நான்! அன்னையே! நீயும் உன் வாழ்க்கைத் துணைவனும் உற்ற நிலையைக்கேட்டு, உன் மாமனும் தந்தையும் சாவே வாழ்வென்று துணிந்து பொருளையெல்லாம் வாரி வழங்கிவிட்டுத் துறவு பூண்டதை அறிவையோ?

**பணிப்பெண்:** (கண்ணீர வடிய) தோழி! அருமைத் தலைவி! அடித்தோழியான நான் உனக்குத் தொண்டு செய்யும் புண்ணியம் பெற்றிருந்தும் அதை ஒழுங்காகக் காப்பாற்றிக்கொண்டிலேன். நீ துன்பம் அடைந்தும் உயிர் சுமந்தேன் அம்மையே! பூவோடு சேர்ந்த நாரும் மணம்பெறும் என்பார்கள். அதுபோல, உன் மணம் பெற்ற மாதவி யடைந்த நிலையறிவாயோ? நீங்கள் பட்டதை யறிந்து, ஊரார் பழிப்புக் கேட்டேங்கித் தன் பொருளையெல்லாம் புத்தர்பெருமான் அறத்துக்

காக்கி, மாதவி துறவு பூண்டதை அறிவையோ? தன் மகள் மணிமேகலையை 'மாபெரும் பத்தினி கண்ணகியின் மகள்' என உன் மகளாக்கி, அவள், 'இனித் திருந்தாச் செய்கைத் தீத்தொழிற் படாள்' எனவுரைத்துக் குதலைச் செல்வியான-பன்னீராண்டு பச்சைக் கிளியான—மணிமேகலையை—மாணிக்கக் கொழுந்தை — அழகின் ஓவியத்தை — நாட்டியக் கலைச் செல்வியைக்—காமன் தன் மலரம்பை வெறு நிலத்தெறிந்து வாடி நிற்கக் குழல் களைந்து துறவி யாக்கியதையுங் கேட்டனையோ?

**தேவந்தி :** (ஐயையின் கையைப் பற்றி) தோழி! கண்ணகி யன்னையே உன்னை அடைக்கலமாகப் பெற்றுங் 'காவாதொழிந்தேன்' என்று கலங்கி உயிர்நீத்த மாதரியம்மையின் மகளைப் பார்! உன் அருமைத் தோழி ஐயையைப் பார்! உன்னையே நினைந்து மணமும் புரிந்துகொள்ளாமல் வாடிநிற்கும் மட மகளைப் பார்!

[தேவந்தியும் ஐயையும் விம்முகின்றனர்! வானிலே ஓர் ஒளி! அதிலே கண்ணகி தோற்றம்]

**செங்குட் :** (வியப்புடன் கண்கலங்கி) என்னே இஃது! என்னே இஃது! அதோ வானத்தை நோக்குங்கள்! பொற்சிலம்பும் புனை மணிமேகலையும் பொற்றொடி யும் வயிரத்தோடும் நாவலம் பொன்னுடையும் அணிந்த மின்னற்கொடி தோன்றுகிறது!

[கை குவிக்கிறான்.]

**எல்லோரும் :** (வியப்புடன் கைகுவித்து) ஆ! கண்ணகிக் கடவுள்! பத்தினித் தெய்வம்! வாழ்க! வாழ்க!

**கண்ணகியார்** (கடவுள் நல்லணியுடன்) செங்குட்டுவன் வாழ்க! பேரின்ப வீட்டுப் பேரரசான இளங்கோ வடிகள் வாழ்க! இங்கு வந்திருக்கும் எல்லீரும் வாழ்க! "தென்னவன் தீதிலன்! அவன் தேவர் கோன் கோயிலிலே நல்விருந்தாயினான்! நான் அவன் மகள்! வென் வேலான் குன்றில் விளையாட்டு யானகலேன்" தோழிமீர்! எல்லீரும் வம்மின்! விளையாடுமின்!

**இலங்கைக் கயவாகு.** (கைகுவித்து) குடமலைத் தெய்வமே! நாங்கள் இலங்கையிலே உனக்குச் செய்யும் வேள்வியினும் இவ்வாறு வெளிப்பட்டருளல் வேண்டும்.

**கண்ணகியார்** என்னை அன்புடன் வழிபடும் இடங்களிலெல்லாம் வெளிப்படுவேன்

**பெண்மாள** (கை குவித்து) வஞ்சியீர் வஞ்சியிடையீர்! அரண்மனை ஆயத்தீர்! எலலீரும் வம்மின்! சிலம்பாற் கூடல்வேந்தை வென்றவளைப் பாடுவோம் வம்மின்! செங்கோல் வளைய உயிர் வாழார் பாண்டியர் என்று எங்கும் இயம்பவைத்து நம் நாடடைந்த நங்கையைப் பாடுவோம் வம்மின்! வம்மின்!

**எல்லாப் பெண்களும்** நன்று! நன்று!!

[மகளிர் வட்டமாக நின்று குமமியடித்து வாழ்த்துப பாடுகிறார்கள.]

---

## வாழ்த்து



*வஞ்சி செழிக்க! மலைவளர் நாடு*
*வளம்பெற! வாழ்கதமிழ்!*
*செஞ்சிலம் பால்வென்றி கொண்டருள் கண்ணகிச்*
*சேயிழை யின்அருளால்.* (1)

*காவிரி நாட்டின் தவக்கொழுந்து! நந்தம்*
*கண்ணின் மணிக்கொழுந்து!*
*பூவிரி வையைநன் னாட்டுக் கொழுந்துநம்*
*புண்ணியப் பெண்கொழுந்து!* (2)

*கொங்குறு செல்வி! குடமலைத் தெய்வம்!*
*கொழிதமிழ் நாட்டரசி!*
*மங்கல மிக்க இலங்கை யரசி! இம்*
*மாநிலப் பேரரசி!* (3)

*சீரிய தெய்வ இமயக்கொடி! உயர்*
*தெய்வத் திருமாது!*
*ஆரிய மன்னர் மணிமுடி மாமலர்!*
*ஆக்கந் தரும்மாது!* (4)

*கற்பின் சுடர்! நம் கருத்தின் சுடர்! எங்கும்*
*காட்சி யினிக்குஞ் சுடர்!*
*அற்பின் சுடர்! நல் லழகின் சுடர்! என*
*ஆயினள் கண்ணகியே.* (5)



கழக வெளியீடு: ௪௭௯

*Published by:*

THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.,
1/140, BROADWAY, MADRAS-1.

*Head Office:*

24, EAST CAR STREET, :: THIRUNELVELI.

விலை ரூ. 1-8.

அப்பர் அச்சகம், சென்னை - 1.